# புதிய ஏற்பாட்டுக் கிரேக்க இலக்கணம்

ஆ. இருபின் மக்ளாஷன்

கிறிஸ்தவ இறையியல் நூலோர் குழு

# புதிய ஏற்பாட்டுக் கிரேக்க இலக்கண அறிமுகம்

ஆ. இருபின் மக்ளாஷன்

கிறிஸ்தவ இறையியல் நூலோர் குழு.

Published by
THE CHRISTIAN LITERATURE SOCIETY
POST BOX 501, PARK TOWN, MADRAS 3

for

TAMIL THEOLOGICAL BOOK CLUB

*General Editor*
GNANA ROBINSON

*Director*
ALBERT MANUEL



*First printed—1972*

PUBLISHED WITH THE HELP OF
THE THEOLOGICAL EDUCATION FUND

PRINTED AT THE BAPTIST MISSION PRESS, CALCUTTA

# அறிமுகம்

"தாய் மொழியிற் கல்வி" என்னும் குரல் தமிழ் நாடெங்கும் எதிரொலிக்கும் காலம் இது. காலத்திற்கும் தேவைக்குமேற்ப, இறையியற் கல்வியையும் தாய் மொழியிற் தருவதென்னும் முடிவைத் தமிழ்த் திருச்சபை மேற்கொண்டது பாராட்டற்பாலது. இந்நிலையில், திருமறையின் மூலமொழிகளாகிய கிரேக்கத்தையும் எபிரேயத்தையும் தமிழ் மொழிமூலம் கற்பது கூடுமோ என்னும் கேள்வி மக்கள் உள்ளங்களில் எழாமலில்லை. கூடும் என்பதைச் செயலளவிலே நிரூபித்துள்ளார் இந்நூலாசிரியரான மறைத்திரு. இருபின் மக்ளாஷன்.

இருபின் மக்ளாஷன் கிரேக்கத்தில் தேர்ச்சி பெற்றவர். அத்துடன் கடந்த ஐந்தரை ஆண்டுகளாக முயன்று தம் தமிழ் அறிவையும் வளர்த்துள்ளார். இந்தத் தம்முடைய இரு மொழி அறிவைத் தம் பணியில் பயன்படுத்தத் துணிந்த இவர் கடந்த ஈராண்டுக் காலமாகத் திருமறையூர் தமிழ்நாடு இறையியற் கல்லூரி மாணவர்களுக்குக் கிரேக்கப் பாடத்தைத் தமிழ் மொழிமூலம் கற்பிக்கும் முயற்சியை மேற்கொண்டு அதில் வெற்றியும் கண்டார். இம்முயற்சியின் பலனை நூல் வடிவாகத்தர வேண்டுமென்ற எம் வேண்டுகோளுக்கிணங்க இந்நூலினை உருவாக்கித் தந்துள்ளார். அவருக்கு எம் உளங் கனிந்த நன்றி.

ஞான இருபின்சன்
பொதுப் பதிப்பாசிரியர்,
கிறிஸ்தவ இறையியல்
நூலோர் குழு

அரசரடி, மதுரை 10,
ஜூலை 1969

# நூன்முகம்

இந்த நூலை எழுத என்னைத் தூண்டிய காரணங்கள் மூன்று உண்டு. கடந்த நாலரை ஆண்டுகளாகப் புதிய ஏற்பாட்டுக் கிரேக்க மொழியைத் தமிழ் இறையியல் மாணவருக்குக் கற்பித்த அனுபவம் முதலாவது காரணம் ஆகும். இதுவரை இப்பாடம் இக்கல்லூரியில் ஆங்கில மொழி வாயிலாகக் கற்பிக்கப்பட்டு வந்துளது. மாணவர்கள் கிரேக்கப் புதிய ஏற்பாட்டுடன் ஆங்கிலப் புதிய ஏற்பாட்டையும் அருகில் வைத்து படிப்பது வழக்கம். இரண்டுமே அவர்களின் தாய் மொழி அல்ல; ஒன்று முற்றிலும் வேற்று மொழி, மற்றதோ அரைகுறையாக அறிந்த மொழி. இந்நிலையில், கல்லூரி நாட்களுக்குப்பின் ஆங்கில மொழிப் புதிய ஏற்பாட்டையோ கிரேக்க மொழிப் புதிய ஏற்பாட்டையோ அவர்கள் திறப்பது அரிது. எனவே கிரேக்கப் பாடத்தை அவர்கள் தேர்வுக்கான ஒரு பாடமாக மட்டுமே கொள்ளுகின்றனர். இதனால் அவர்களது திருமறை அறிவு எவ்வகையிலும் வளர்ச்சி பெறுவதில்லை. கிரேக்கப் பாடம் மாணவர்களுடைய வருங்காலத் திருப்பணிக்குப் பயனுடையதாக அமைய வேண்டுமென்றால் ; அவர்கள் கடவுளின் வார்த்தையைப் பிறர் உணர்ந்து கொள்ள ஒளியூட்டுபவராக விளங்க வேண்டுமென்றால் ; இப்பாடம் தமிழ்த் திருமறையைப் படிப்பதுடன் இணைந்து செல்ல வேண்டும். அதாவது, மாணவர்கள் கிரேக்க ஆங்கிலப் புதிய ஏற்பாடுகளையல்ல, கிரேக்கத் தமிழ்ப் புதிய ஏற்பாடுகளை அருகருகே வைத்துக் கற்க வேண்டும். புதிய ஏற்பாட்டுக் கிரேக்க மொழியைத் தமிழ் மொழி வாயிலாகப் •படிக்க வேண்டும்.

இரண்டாவது காரணம், நான் தமிழ்ப் புதிய ஏற்பாட்டு மொழி பெயர்ப்புப் பரிசீலனைக் குழுவின் அங்கத்தினனாக இருந்து பெற்ற அனுபவம் ஆகும். இக்குழுவில் கடந்த மூன்று ஆண்டுகளாகத் தொடர்ந்து பணியாற்றிய அங்கத்தினர்களில் இருவர் தமிழர், இருவர் வெளிநாட்டுச் சமயத் தொண்டர். தமிழ் அங்கத்தினர் தமிழ் மொழி நடையையும், மெல்நாட்டு அங்கத்தினர் கிரேக்க மொழியையும் கவனித்து வந்தனர். தமிழ்நாட்டில் (Protestant) சீர்திருத்தத் திருச்சபை ஏறத்தாழ இருநூற்றைம்பது ஆண்டுகள் ஆகியபின்னும், கிரேக்க மொழியில் தேர்ந்த தமிழ்க் கிறிஸ்தவர்கள் இன்னமும் தோன்றவில்லையாம் (அப்படி எவரேனும் இருந்தால், அவர்கள் இப்பணியில் தங்கள் பங்கை ஏற்க முன்வருவார்களாக). தமிழ் கிரேக்கம் ஆகிய இரு மொழிகளிலும் தேர்ச்சி பெற்ற ஒருவராவது இக்குழுவில் இல்லாதது இக்குழு திறம்படச் செயலாற்ற ஒரு பெருந்தடை ஆகும். இந்த நூல் இக்குறையை உடனடியாக அகற்றிவிடும் என்று நான் சொல்லவில்லை. ஆனால் இத்துறையில் தமிழ்த் திருச்சபை தன்னிறைவு பெற

வேண்டுமானால், கிரேக்க மொழியைக் கற்கும் முறையில் ஒரு மாற்றம் தேவை என்பதை இங்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

மூன்றாவது காரணம், தென்னிந்திய திருச்சபையின் அங்கத்தினர் பலர் தங்கள் கையில் இருக்கும் தமிழ்த் திருமறை எபிரேய கிரேக்க மொழிகளிலிருந்து திருப்பப்பட்ட ஒரு மொழிபெயர்ப்பு என்பதின் கருத்தைப் புரிந்துகொள்ளாமலிருப்பதாகும். இத்தகையோர் போக்கு விசித்திரமாக இருக்கிறது. இவர்கள் திருமறையைக் கனம்பண்ணுகிறார்கள் என்று கூறுவதற்கில்லை; திருமறையில் ஒரு குறிப்பிட்ட தமிழ் மொழிபெயர்ப்பையே கனம்பண்ணுகிறார்கள். இதைத் "திருமறை பக்தி" என்பதை விட, "பவர்பக்தி" (இப்போது நம் கைகளில் இருக்கும் பழைய மொழிபெயர்ப்பாகிய வேதாகமம் பவர் என்பவர் தலைமையில் மொழிபெயர்க்கப்பட்டது) என்பது பொருந்தும். கிரேக்க மொழிப் புதிய ஏற்பாட்டைப் படித்து, அதனைத் தமிழ்ப் புதிய ஏற்பாட்டுடன் ஒப்பிட்டுப் படிக்குமளவிற்குத் தேர்ச்சி பெற்ற ஒருவர், ஒரு தனிப்பட்ட மொழிபெயர்ப்பை என்றென்றும் மாறா நிலைக்கு உயர்த்த மாட்டார். ஒரு குறிப்பிட்ட காலத்திற்குரிய சொல் அல்லது சொற்றொடர், கடவுளுடைய வார்த்தையின் உயிர், ஆற்றல், நுண்பொருள் அனைத்தையும் தன்னுள் கொள்ள முடியாது என்பதை அவர் அறிவார். தமிழ் பேசும் கிறிஸ்தவர்கள் கிரேக்கப் புதிய ஏற்பாட்டைப் படிக்கக் கற்றுக் கொண்டால், அவர்கள் அத்தகைய தவறான கருத்துக்களைக் களைந்து, கடவுளுடைய வார்த்தையின் ஆற்றலின் முழுமையையும் உணர்ந்து போற்றக் கூடும். அதற்குறிய கிரேக்க மொழி அறிவை அடைய இந்நூல் அவர்களுக்கு உதவும் என்பது எமது நம்பிக்கை.

"புதிய ஏற்பாட்டுக் கிரேக்கத்தை நீயே கற்றுக்கொள்" என்கிற வகையில் இந்நூல் அமைக்கப்படவில்லை. ஆசிரியர் ஒருவர் உதவியுடன் படிக்கும் மாணவர்களை மனதில் கொண்டே இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. தாமே மொழிப் பயிற்சி செய்து படிப்பதற்கான ஒரு நூல் இதைவிட மிகுதியான விளக்கங்களையும் எடுத்துக்காட்டுக்களையும் கொண்டிருக்க வேண்டும்.

மேலும் மொழி ஆய்வு துறையின் எல்லா நியதிகளையும் கையாண்டு இந்நூல் எழுதப்படவில்லை. ஏனெனில் அந்நியதிகள் பெரும்பாலும் பேச்சு வழக்கத்திலுள்ள மொழிகளைக் குறித்தவையாகும். பேச்சு வழக்கற்று, படிப்பு வழக்கில் மாட்டுமுள்ள ஒரு மொழியைப் படிக்கும்போது, அந்நியதிகள் அந்த அளவில் பொருந்தா. இங்குப் படிக்கிறவருடைய கண்களுக்கே வேலை, நாவுக்கோ காதுக்கோ அவ்வளவு வேலை இல்லை.

கிரேக்க மொழிப் புதிய ஏற்பாட்டை, குறிப்பாக யோவானின் முதலாம் நிருபத்தைப் படிக்க உதவும் வகையில் இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. மூலமொழியில் புதிய ஏற்பாட்டைப் படிக்க விழையும் ஒருவர்

முதலாவது அணுகும் நூல் யோவானின் முதலாம் நிருபம். அந்நிருபத்தில் ஏறக்குறைய 220 வெவ்வேறு கிரேக்கச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. அவை யாவும் விளக்கங்களிலும் பயிற்சிகளிலும் வராமலிருப்பினும், இறுதியிலுள்ள சொற்பொருள் அட்டவணையில் இடம் பெற்றுள்ளன. ஆகையால் இந்நூல் இந்நிருபத்தைப் படிப்பதற்குத் துணையாக அமையும். யோவானின் முதலாம் நிருபத்தில் வராத சில சாதாரணச் சொற்களும் இங்கு இடம் பெற்றதால், பயிற்சிகளுடன் இணைந்து வரும் சொற்களின் எண்ணிக்கை 230 ; இறுதியில் தரப்பட்ட சொற்பொருள் அட்டவணையில் அடங்கிய சொற்களின் எண்ணிக்கை 310.

தமிழிலிருந்து கிரேக்கத்தில் மொழிபெயர்ப்பதைவிட, கிரேக்கப் புதிய ஏற்பாட்டைச் சரிவரப் புரிந்துகொள்வதே முக்கியம். ஆதலால் தமிழிலிருந்து கிரேக்கத்தில் மொழிபெயர்ப்பதைவிட, கிரேக்கத்திலிருந்து தமிழில் பெயர்ப்பதே பயிற்சிகளில் கூடுதலாக இடம் பெற்றுள்ளது. எனினும் முந்தியது பிந்தியதற்கு ஓர் அளவு உதவியாயிருப்பதால் முந்தியதையும் நாம் பயிற்சிகளில் தந்துள்ளோம். விளக்கப் பகுதிகளும், கிரேக்க இலக்கணப்படி தனிப் பதங்களில் உண்டாகும் உருமாற்றங்களைக் கண்டறியவும் அவற்றின் பொருளைத் தமிழ் மரபுக்கேற்பத் தமிழில் மொழிபெயர்க்கவும் உதவியாக அமைக்கப்பட்டுள்ளன.

பொருள் அட்டவணையைக் கண்டமாத்திரத்திலேயே நூலின் அமைப்புத் தெரிய வரும். அமைப்பு எளியதாக இருக்கிறதென்னும் பெருமை நூலுக்கு உண்டென்று நாம் நம்புகிறோம். ஆனால் ஆசிரியர் இந்த முறைமையையே பின்பற்ற வேண்டுமென்ற கட்டாயம் இல்லை ; அவர் விரும்பினால் பாடங்களை வேறு முறைமையில் எடுத்துக் கற்பிக்கலாம். இது முற்றிலும் ஒரு புது முயற்சி ஆதலால், மாணவர் ஆசிரியர் தம் பயிற்சி அனுபவப் போக்கில் தேவையான மாற்றங்களைச் செய்து கொள்ள இங்குப் பூரண இடமளிக்கப்பட்டுள்ளது.

இந்த நூலை இயற்றும் பணியில் எனக்குத் துணைபுரிந்த பலருக்கு நான் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன். கடந்த ஐந்தரை ஆண்டுகளாக எனக்குத் தமிழ் கற்றுத்தந்த தமிழாசிரியர் யாவருக்கும், குறிப்பாகப் பவணந்தியாரின் நன்னூலை எனக்கு அறிமுகப்படுத்தின பிள்ளையன்மனை வித்வான் உ. முருகன் அவர்களுக்கும் எனது நன்றி. இலக்கணக்கலை நுணுக்கச் சொற்களைத் தொகுப்பதிலும் இதர பல செயல்களிலும் நல் ஆலோசனைகளைத் தந்துதவிய தமிழ் அறிஞர்களுக்கும், குறிப்பாக இந்நூலின் கைப்பிரதியைப் படித்துக் கருத்துத் தெரிவித்த பேராசிரியர் P. சோதிமுத்து அவர்களுக்கும் எனது நன்றி. புதிய ஏற்பாட்டுத் தமிழ் மொழிபெயர்ப்புப் பரிசீலனைக் குழு அங்கத்தினருக்கும், அதன் தலைவரான மறைத்திரு D. இராஜரீகம் அவர்களுக்கும் எனது நன்றி. அவர்களுடன் அக்குழுவின் வேலையில் ஒத்துழைக்கையில் நான் கிரேக்கப்

புதிய ஏற்பாட்டை மிக்க நுட்பமாக ஆராய்ச்சி செய்து பல புதிய உண்மைகளைக் கற்றுணர்ந்துள்ளேன். இந்நூலின் அமைப்பையும் விளக்கங்களையும் பல தடவை திருத்தித் தெளிவாக்க எனக்கு ஊக்கமூட்டிய திருமறையூர் மாணவர்களுக்கும் என் நன்றி. இறுதியாக, தமிழ் இறையியல் நூலோர் குழுவின் பதிப்பாசிரியரும் என் நண்பரும் உடனூழியருமான மறைத்திரு ஞான இருபின்சன் அவர்களுக்கும் நான் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன். சோர்வடையாது உற்சாகமூட்டுவதிலும் ஏற்ற வேளையில் தக்க ஆலோசனைகளைத் தந்துதவுவதிலும் அவர்கள் எனக்குப் பெருந்துணையாக இருந்தார்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக, நான் தமிழ் நாட்டில் சமயத் தொண்டு செய்கிற என் முதல் ஊழியக் காலத்தை முடித்துத் தாய்நாடு திரும்பும் இந்த இரு நாட்களுக்குள், இந்நூலினை எழுதி முடிக்கப் பலமும் அருளும் அளித்த இறைவனுக்குத் துதி செலுத்துகின்றேன். தாய்நாடு திரும்புவதால் இந்நூலை உடனடியாக வகுப்பறையில் பயிற்சிக்குப் பயன்படுத்திப் பரிசோதித்துப் பார்க்கும் வாய்ப்பு எனக்கில்லையே என்று வருந்துகிறேன். ஆயினும் இதர ஆசிரியர்கள் இதைப் பயன்படுத்த முன்வந்து பயனுடையதாகக் காண்பார்கள் என நம்புகிறேன். நம தாண்டவரும் மீட்பருமான இயேசு கிறிஸ்துவின் புதிய ஏற்பாட்டை ஊன்றிப் படிக்கும் ஆர்வத்தைத் தமிழ்த் திருச்சபையில் உருவாக்க இந்நூல் தன் எளிய நிலையில் உதவ வேண்டும் என்ற மன்றாட்டுடன் இதனை இறைவனின் அருட்கரத்தில் ஒப்படைக்கின்றேன்.

ஏப்பிரல், 1969
திருமறையூர்

ஆ. இருபின் மக்ளாஷன்

# பொருளடக்கம்

# அதிகாரம் 1

## எழுத்தியல்

கிரேக்க மொழியில் இருபத்து நான்கு எழுத்துக்கள் உண்டு, அவை யாவும் முதலெழுத்துக்களே. கிரேக்கத்தில், உயிர்மெய் ஆய்தம் அளபெடை குறுக்கம் ஆகிய சார்பெழுத்துக்கள் இல்லை. அந்த இரு பத்து நான்காவன:

| சிற்றுருவம் | பேருருவம் | தமிழ்ப் பெயர் | ஆங்கிலப் பெயர் | ஒலிப்பு |
|---|---|---|---|---|
| $\alpha$ | $A$ | அல்ஃபா | alpha | 1. ஆ<br>2. **hat** எனும் ஆங்கிலச் சொல்லில் வந்த a-உயிர் |
| $\beta$ | $B$ | பீற்று | beta | பதில் என்பதில் வந்த ப-மெய் |
| $\gamma$ | $\Gamma$ | கம்மா | gamma | கீதம் என்பதில் வந்த க-மெய் |
| $\delta$ | $\Delta$ | டெல்ற்று | delta | ஆடு என்பதில் வந்த ட-மெய் |
| $\epsilon$ | $E$ | எப்சைலொன் | epsilon | எ |
| $\zeta$ | $Z$ | சீற்று | zeta | *zoo* எனும் ஆங்கிலச் சொல்லில் வந்த z-மெய் |
| $\eta$ | $H$ | ஈற்று. | eta | ஈ |
| $\theta$ | $\Theta$ | தீற்று | theta | அது என்பதில் வந்த த-மெய் |
| $\iota$ | $I$ | இயோற்று | iota | இ |
| $\kappa$ | $K$ | கப்பா | kappa | கை யென்பதில் வந்த க-மெய் |
| $\lambda$ | $\Lambda$ | லம்டா | lambda | ல் |
| $\mu$ | $M$ | மியூ | mu | ம் |
| $\nu$ | $N$ | நியூ | nu | ன் |
| $\xi$ | $\Xi$ | க்சை | xi | க்ஸ் |
| $o$ | $O$ | ஒமைக்ரொன் | omicron | ஒ |
| $\pi$ | $\Pi$ | பை | pi | பை என்பதில் வந்த ப-மெய் |
| $\rho$ | $P$ | ரோ | rho | ர் |
| $\sigma, s$ | $\Sigma$ | சிக்மா | sigma | ஸ் |
| $\tau$ | $T$ | இற்றுவ் | tau | காற்று என்பதில் வந்த இரட்டித்த ற-மெய் (ஆங்கிலத்தில், *T*) |
| $\upsilon$ | $\Upsilon$ | யுப்சைலொன் | upsilon | உ |
| $\phi$ | $\Phi$ | ஃபை | phi | ஃப் (ஆங்கிலத்தில், *F*) |
| $\chi$ | $X$ | ஹை | chi | அகம் என்பதில் வந்த க-மெய் |
| $\psi$ | $\Psi$ | ப்சை | psi | ப்ச் |
| $\omega$ | $\Omega$ | ஒமெகா | omega | ஓ |

__குறிப்புக்கள் :__

1. இந்த மொழி இப்போதும் வழக்கத்தில் இருப்பினும், கடந்த பத்தொன்பது நூற்றாண்டுகளில் இதில் அநேக மாறுதல்கள் உண்டாயிருக்கின்றன. ஆதலால் புதிய ஏற்பாட்டுக் காலத்தில் இந்த எழுத்துக்கள் எவ்வாறு ஒலிக்கப்பட்டன என்பது இப்போது ஒருவருக்கும் திட்டமாய்த் தெரியாது. எனவே வேறு ஆசிரியர்கள் சில எழுத்துக்களை வேறு முறையில் உச்சரிக்கலாம்.

2. மேற்கண்ட இருபத்து நான்கு எழுத்துக்களில், α ε η ι ο υ ω ஆகிய ஏழும் உயிர்களும், மீதியான பதினேழும் மெய்களும் ஆகும். அவ்வேழு உயிர்களில், α ι υ ஆகிய மூன்றும் குறிலாகவாவது நெடிலாகவாவது வரலாம். ε என்பது η ஆகிய நெடிலுக்கு இனமான குறிலும், ο என்பது ω ஆகிய நெடிலுக்கு இனமான குறிலும் ஆகும்.

3. __மூச்சொலிக்குறியீடு__: ஓர் உயிர் எழுத்து மொழி முதலில் நிற்கும்போது, அதற்குமேலே ஒரு மூச்சொலிக்குறி எழுதப்படல் வேண்டும். மூச்சொலிக்குறிகள் இருவகைப்படும். மொழி முதலில் நிற்கிற ஓர் உயிருக்குமேல் ‘ ஆகிய வன்மூச்சொலிக்குறி வரும்போது, அந்த உயிருக்குமுன் ஹ (அல்லது ஆங்கிலத்தில் *H*) நிற்கிறாற்போல அது ஒலிக்கப்படும். அதற்குமேல் ’ ஆகிய மென்மூச்சொலிக்குறி வரும்போது, அது ஹ இல்லாமல் சாதாரண முறையில் ஒலிக்கப்படும்.

| எ—கா : | சொல் | ஒலிப்பு |
|---|---|---|
| | ἁ | ஹ |
| | ἀ | அ |
| | ἑν | ஹென் |
| | ἐν | என் |

4. __இணையுயிர்__ (diphthong): இரண்டு உயிர்கள் சேர்ந்து நிற்கும் போது, அவை ஒரே உயிராக ஒலிக்கப்படும்.

| இணையுயிர் | ஒலிப்பு |
|---|---|
| αι, ει | ஐ |
| οι | ஒய் |
| αυ | *paw* எனும் ஆங்கிலச் சொல்லில் வந்த *aw* (அல்லது, ஔ) |
| ου | ஔ (அல்லது, ஊ) |
| ευ | யூ |
| υι | உய் |

ஓர் இணையுயிர் மொழி முதலில் நிற்கும்போது, அதற்குரிய மூச் சொலிக்குறி இரண்டாவது உயிருக்குமேல் எழுதப்படல் வேண்டும்.

எ—கா : αἰ οἱ εἰ αὑ εὐ

5. கீழ் இயோற்று (iota subscript) : சில சொற்களில் α η ω ஆகிய உயிர்களுக்குக் கீழே இயோற்று எழுதப்படும் (எ—கா : ᾗ ᾧ ᾠρᾳ). அது ஒலிக்கப்படாது, ஆயினும் அது தவறாது எழுதப்படல் வேண்டும்.

6. கம்மா (γ), γ κ ξ χ ஆகியவற்றில் ஒன் றுக்குமுன் வரும்போது. அது ங்–மெய்யாக ஒலிக்கப்படும்.

எ—கா : ἐγγυς எங்குஸ்
ἐλεγχω எலெங்கோ

7. ஒலியழுத்தக்குறியீடு (accentuation) : கிரேக்கப் புதிய ஏற்பாட் டுப் பிரதிகளில், ` ´ ˆ ஆகிய ஒலியழுத்தக்குறிகள் எழுத்துக்களுக்கு மேலே காணப்படும். பொதுவாக அவை பொருளற்றவை. ஆதலால் இந்த நூலில் அவை கையாளப்படவில்லை. ஆயின் ஒரு சில இடங் களில் அவை ஒரு சொல்லின் அர்த்தத்தை அறிந்து கொள்ள உதவும். அத்தகைய இடங்களில் மட்டும் அவை இங்குச் சேர்க்கப்படும்.

8. நிறுத்தக்குறியீடு (punctuation) : கிரேக்கத்தில் நான்கு நிறுத்தக்குறிகள் உண்டு. அவையாவன :

(அ) கால்புள்ளி ——,——
(ஆ) அரைப்புள்ளி ; ——·——
(இ) முற்றுப்புள்ளி . ——.——
(ஈ) கேள்விக்குறி ? ——;——

9. பேரெழுத்துக்கள் : கீழ்க்கண்ட சொற்களின் முதலாம் எழுத்து வழக்கமாகப் பேருருவத்தில் எழுதப்படும் :

(அ) ஆட்களின் பெயர்களும் இடங்களின் பெயர்களும்
(ஆ) ஒரு பத்தியின் முதல் சொல்
(இ) நேர்க்கூற்றில் வருகின்ற முதல் சொல்

# அதிகாரம் 2

## பெயரியல் (i)

கிரேக்கப் பெயர்ச் சொற்களில் நான்கு முக்கியமான கூறுபாடுகள் உண்டு.

1. இனம் (declension): முதலாம் இனம் இரண்டாம் இனம் மூன்றும் இனம் ஆகிய மூன்று இனங்கள் உண்டு. ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வகையான வேற்றுமை உருபு வரிசை வருகிறது.

2. பால் (gender): ஒவ்வொரு பெயர்ச்சொல்லும் ஆண்பாலாகவோ பெண்பாலாகவோ அலிப்பாலாகவோ இருக்கும். அதன் பால் அதன் பொருளைச் சார்ந்ததன்று. உதாரணமாக, தன்னில்தானே ஆண்மையோ பெண்மையோ அல்லாத ஒரு பொருள் கிரேக்கத்தில் அலிப்பாலாயிருப்பது அவசியமில்லை; அது ஆண்பாலாயிருக்கலாம், அல்லது பெண்பாலாயிருக்கலாம். ஏனெனில் ஒரு பெயரின் பால் அதன் பொருளுக்கு அன்று, அதன் உருவத்திற்கு மட்டுமே பொருந்தும்.

3. எண் (number): ஒவ்வொரு பெயர்ச்சொல்லிலும் ஒருமை பன்மை ஆகிய இரண்டு எண்ணும் உண்டு. ஒரு சொல் ஒருமையில் எந்தப் பாலாயிருக்கிறதோ, பன்மையிலும் அதே பாலாயிருக்கும். அதாவது, பன்மையில் மட்டும் வரக்கூடிய பலர்பால் பலவின்பால் போன்ற விசேஷித்த பால்பிரிவுகள் கிரேக்கத்தில் இல்லை.

4. வேற்றுமை (case): ஒரு கிரேக்கப் பெயரில் ஒருமையிலும் பன்மையிலும் ஐந்து வேற்றுமைகள் உண்டு. அந்தப் பெயர் ஏற்கும் வேற்றுமை உருபு வரிசை அதன் இனத்தையும் பாலையும் சார்ந்ததாகும்.

பின்வரும் உதாரணங்கள் இந்த நான்கு கூறுபாடுகளையும் தெளிவுற எடுத்துக்காட்டும்.

### (அ) இரண்டாம் இனப் பெயர்கள்—ஆண்பால் (Masculine)

ஒன்றும் இனப் பெயர்களைப் படிக்குமுன் இரண்டாம் இனப் பெயர்களைப் படிப்பது முரண்பாடாகத் தோன்றலாம். எனினும், இரண்டாம் இனப் பெயர்கள் ஒன்றும் இனப் பெயர்களை விட எளியவை ஆதலால் அவ்வாறே படிப்பது வழக்கம்.

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| எழுவாய் வேற்றுமை | λογ ος | λογ οι |
| விளி வேற்றுமை | λογ ε | λογ οι |
| செயப்படுபொருள் வேற்றுமை | λογ ον | λογ ους |
| உடைமைப்பொருள் வேற்றுமை | λογ ου | λογ ων |
| கொடைப்பொருள் வேற்றுமை | λογ ῳ | λογ οις |

**λογος** என்பது வார்த்தை எனப் பொருள்படும். **λογ** என்பது பகுதி; **ος, ε** முதலியன பகுதியோடு சேரும் வேற்றுமை உருபுகள். பகுதி உருபின்றித் தனியாக நிற்க இயலாது. உருபுகள் பகுதியோடு சேரும்போது, விகாரம் ஏற்படாது. **λογος** போன்ற பெயர்கள் பெரும் பாலும் ஆண்பாலாகும்; ஒரு சில மட்டும் பெண்பாலாகும். **λογος** போன்ற பெண்பால் பெயர்களும் அதே உருபு வரிசையை எற்கும் (எ—கா: **ὁδος**=வழி, **παρθενος**=கன்னிகை).

மேற்கண்ட ஐந்து வேற்றுமைகளும் பின்வருமாறு பயன்படுத்தப் படும்:

1. எழுவாய் வேற்றுமை (nominative): ஒரு வினைமுற்றுக்கு எழு வாயாய் நிற்கும் பெயர் எழுவாய் வேற்றுமையில் இருக்கும். இது தமிழில் முதலாம் வேற்றுமையைப் போலாகும்.

எ—கா: கிறிஸ்து இரட்சிக்கிறார்
**Χριστος** . . .

2. விளி வேற்றுமை (vocative): ஒரு ஆளைப் பார்த்துக் கூப்பிடும் போது, விளி வேற்றுமை பயன்படுத்தப்படும். இது தமிழில் 8—ஆம் வேற்றுமையைப் போன்றதாகும்.

எ—கா: கிறிஸ்துவே, இரட்சியும்
**Χριστε**, . . .
விளி வேற்றுமையிலுள்ள ஒரு பெயருக்கு முன் **ὦ** எனும் இடைச்சொல் வரலாம் (எ—கா: **ὦ Χριστε**). தமிழில் அதை மொழி பெயர்க்க முடியாது.

3. செயப்படுபொருள் வேற்றுமை (accusative): ஒரு வினைச் சொல்லுக்குச் செயப்படுபொருளாக நிற்கும் பெயர் செயப்படுபொருள் வேற்றுமையில் இருக்கும். இது தமிழில் இரண்டாம் வேற்றுமையைப் போன்றதாகும்.

எ—கா: கடவுள் கிறிஸ்துவை உயர்த்தினார்
. . . **Χριστον** . . .

4. <u>உடைமைப் பொருள் வேற்றுமை</u> (genitive): இது ஒரு பொருள் யாருடையது என்று உணர்த்தும். தமிழில் இது ஆறும் வேற்றுமையைப் போன்றதாகும்.

எ—கா: கிறிஸ்துவின் வார்த்தை
λογος Χριστ<u>ου</u>

5. <u>கொடைப் பொருள் வேற்றுமை</u> (dative): இது ஒரு பொருள் யாருக்குக் கொடுக்கப்பட்டது என்பதையாவது ஒரு செயல் யாருக்காகச் செய்யப்பட்டது என்பதையாவது உணர்த்தும். தமிழில் நான்காம் வேற்றுமை இந்தப் பொருளை உணர்த்தும்.

எ—கா: கிறிஸ்துவுக்குக் கொடுத்தேன்
Χριστ<u>ῳ</u> . . .

தமிழ் வேற்றுமைகள் தரும் ஏனைய அர்த்தங்களை உணர்த்தும்படி, கிரேக்கத்தில் முன்னிடைச்சொல் என்கிற ஒரு வகைச் சொற்கள் பயன் படுத்தப்படும் (பக். 15 காண்க).

---

பயிற்சி 1, பக். 93 காண்க.

## (ஆ) இரண்டாம் இனப் பெயர்கள்—அலிப்பால் (Neuter)

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| எழுவாய் வேற். | ἐργ ον | ἐργ α |
| விளி வேற். | ἐργ ον | ἐργ α |
| செயப். வேற். | ἐργ ον | ἐργ α |
| உடைமைப். வேற். | ἐργ ου | ἐργ ων |
| கொடைப். வேற். | ἐργ ῳ | ἐργ οις |

<u>குறிப்புக்கள்</u>:

1. ἐργον என்பது கிரியை அல்லது செயல் எனப் பொருள்படும்.

2. இதில், எழுவாய் விளி செயப்படுபொருள் வேற்றுமை உருபுகள் ஒன்றுபோலிருக்கின்றன. ஒருமையில் ον என்பது உருபாக வரும்; பன்மையில் α என்பது உருபாக வரும்.

3. ἐργον பெறும் உடைமைப்பொருள் கொடைப்பொருள் வேற்றுமை உருபுகளும் λογος பெறுவனவும் ஒன்றுதான்.

---

பயிற்சி 2, பக். 93 காண்க.

## (இ) முதலாம் இனப் பெயர்கள்—பெண்பால் (Feminine)

(இனிமேல் பகுதியும் உருபும் சரியானபடி சேர்த்து எழுதப்படும்)

| ஒருமை | ἀρχη = துவக்கம் | ἡμερα = நாள் | δοξα = மகிமை |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | ἀρχη | ἡμερα | δοξα |
| விளி வேற். | ἀρχη | ἡμερα | δοξα |
| செயப். வேற். | ἀρχην | ἡμεραν | δοξαν |
| உடைமைப். வேற். | ἀρχης | ἡμερας | δοξης |
| கொடைப். வேற். | ἀρχῃ | ἡμερᾳ | δοξῃ |
| **பன்மை** | | | |
| எழுவாய் வேற். | ἀρχαι | ἡμεραι | δοξαι |
| விளி வேற். | ἀρχαι | ἡμεραι | δοξαι |
| செயப். வேற். | ἀρχας | ἡμερας | δοξας |
| உடைமைப். வேற். | ἀρχων | ἡμερων | δοξων |
| கொடைப். வேற். | ἀρχαις | ἡμεραις | δοξαις |

குறிப்புக்கள் :

1. இரண்டாம் இனப் பெயர்களில் பொதுவாக ο அல்லது ω உருபில் வந்தது. இந்த மூன்றிலோ η அல்லது α வருகிறது. இதில்தான் இரண்டாம் இனத்திற்கும் முதலாம் இனத்திற்கும் இடையேயுள்ள வேறுபாடு காணப்படுகிறது. இம்மூன்றும் பன்மையில் ஒன்றுபோலாகும் எனவும் காண்க.

2. பகுதி ஈற்றில் மெய்யெழுத்தைக் கொண்ட முதலினப் பெண்பால் பெயர்கள் ἀρχη போலவும், பகுதி ஈற்றில் உயிர் அல்லது ρ-மெய் கொண்டவை ἡμερα போலவும் ஆகும் என்பது பொது விதி.

எ—கா :

| | |
|---|---|
| ἀρχ + η | ἡμερ + α |
| ἀγαπ + η | ὡρ + α |
| ψυχ + η | καρδι + α |

(புறநடை—ζωη பகுதி ஈற்றில் உயிர் கொண்டதாயினும், ἀρχη போல உருபேற்கும்)

3. சில முதலினப் பெண்பால் பெயர்கள் பகுதி ஈற்றில் மெய் கொண்டவையாயினும், எழுவாய் வேற்றுமை ஒருமையில் α-எனும் உருபு பெறும். அவை எல்லாம் δοξα போல உருபேற்கும்.

## (ஈ) முதலாம் இனப் பெயர்கள்—ஆண்பால்

| ஒருமை | προφητης = தீர்க்கதரிசி | νεανιας = வாலிபன் |
|---|---|---|
| எழுவாய் வேற். | προφητης | νεανιας |
| விளி வேற். | προφητα | νεανια |
| செயப். வேற். | προφητην | νεανιαν |
| உடைமைப். வேற். | προφητου | νεανιου |
| கொடைப். வேற். | προφητῃ | νεανιᾳ |
| பன்மை | | |
| எழுவாய் வேற். | προφηται | νεανιαι |
| விளி வேற். | προφηται | νεανιαι |
| செயப். வேற். | προφητας | νεανιας |
| உடைமைப். வேற். | προφητων | νεανιων |
| கொடைப். வேற், | προφηταις | νεανιαις |

குறிப்புக்கள் :

1. இவற்றின் பன்மை முதலினப் பெண்பால் பெயர்களின் பன்மையைப் போலிருக்கிறது. ஒருமையில் விளி வேற்றுமையும் உடைமைப்பொருள் வேற்றுமையும் கவனிக்கப்படத் தக்கவை.

2. பகுதி ஈற்றில் உயிர் அல்லது ρ–மெய் கொண்ட முதலின ஆண்பால் பெயர்கள் **νεανιας** போலவும், பகுதி ஈற்றில் ρ–அல்லாத மெய் கொண்டவை **προφητης** போலவும் ஆகும்.

---

பயிற்சி 3, பக். 94 காண்க.

## (உ) சிறப்புச் சுட்டு (Definite Article)

ஒரு பெயர்ச்சொல் குறிப்பிட்ட, அல்லது முன்சொன்ன, அல்லது எல்லாருக்கும் தெரிந்த, ஒரு பொருளைக் குறிக்கும்போது, அதற்குமுன் சிறப்புச் சுட்டு எனப்படும் ஒரு சொல் நிற்கும். அந்தப் பெயர்ச்சொல் எந்தப் பாலிலும் எண்ணிலும் வேற்றுமையிலும் இருக்கிறதோ, அதற்கு ஏற்ற உருவை அதன் சிறப்புச் சுட்டு ஏற்கும். எனவே சிறப்புச் சுட்டில் வேற்றுமை வேறுபாடும் எண் வேறுபாடும் மட்டும் அல்ல, பால் வேறுபாடும் கூடக் காணப்படும். அதன் விபரத்தைக் கீழே காண்க.

| ஒருமை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | ὁ | ἡ | το |
| செயப். வேற். | τον | την | το |
| உடைமைப். வேற். | του | της | του |
| கொடைப். வேற். | τῳ | τῃ | τῳ |

| பன்மை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | οἱ | αἱ | τα |
| செயப். வேற். | τους | τας | τα |
| உடைமைப். வேற். | των | των | των |
| கொடைப். வேற். | τοις | ταις | τοις |

குறிப்புக்கள் :

1. விளி வேற்றுமையில் நிற்கும் பெயரோடு சிறப்புச் சுட்டு வராது.

2. கீழ்க்கோடிட்ட இடங்களிலேயன்றி, ஆண்பாலில் λογος என் பதன் உருபுகளும் பெண்பாலில் ἀρχη என்பதன் உருபுகளும் அலிப் பாலில் ἐργον என்பதன் உருபுகளும் τ எனும் பகுதியோடு சேர்வதால், இந்தச் சிறப்புச் சுட்டு உருவாகிறது.

3. பயன்படும் முறை :

எ—கா : ὁ υἱος எழுவாய் வேற்றுமை ஒருமையில் நிற்கும் ஆண் பால் பெயரோடு, ஆண்பால் எழுவாய் வேற்றுமை ஒருமைச் சிறப்புச் சுட்டு வந்தது.

τα ἐργα எழுவாய் (அல்லது செயப்.) வேற். பன்மையில் நிற்கும் அலிப்பால் பெயரோடு, அலிப்பால் எழு வாய் (அல்லது செயப்.) வேற். பன்மைச் சிறப்புச் சுட்டு வந்தது.

τον προφητην செயப். வேற். ஒருமையில் நிற்கும் ஆண்பால் பெய ரோடு, ஆண்பால் செயப். வேற். ஒருமைச் சிறப்புச் சுட்டு வந்தது. προφητην என்பதன் உருவம் பெண் பாலாகத் தோன்றினும், அது ஆண்பால்தான். ஆகவே அதனோடு την அன்று, τον என்பதே சுட்டாக வந்தது.

4. பொருள் : தமிழில் சிறப்புச் சுட்டும் இல்லை, பொதுச் சுட்டும் இல்லை, எனினும் கீழ்க்காணும் வாக்கியங்களில் அந்தச் சுட்டுக்கள் தரும் பொருள் ஒருவாறு வந்தது :

நான் சில பையன்கள் ஒரு நாயை அடிக்கிறதைக் கண்டேன் ;

அவர்கள் கையிலிருந்து அந்த நாயைப் பறித்துக் காப்பாற்றி னேன்.

இரண்டாம் வாக்கியத்தில் "அந்த" எனும் சொல் "நான் முன்னே சொன்ன" என்று பொருள்படும். அது ஓர் அளவுக்குக் கிரேக்கச் சிறப்புச் சுட்டிற்கு ஒப்பாகும். சில இடங்களில் "அந்த" எனும் சுட்டைக் கொண்டு கிரேக்கச் சிறப்புச் சுட்டை மொழிபெயர்க்கலாம்.

தமிழிலும் கிரேக்கத்திலும் சரியான பொதுச் சுட்டு இல்லே, ஆயினும் முதல் வாக்கியத்தில் "ஒரு" என்பது பொதுச் சுட்டைப் போன்றதாம். கிரேக்கத்தில் ஒரு பெயர் சிறப்புச் சுட்டின்றி வரும்போது, தமிழில் "ஒரு" என்பதை அதனேடு சேர்ப்பது சில இடங்களில் பொருந்தும்.

5. <u>சிறப்பு விதிகள்</u>: கீழ்க்காணும் இடங்களில் சிறப்புச் சுட்டு பயன்படுவது வழக்கம்:

(அ) கடவுள் என்று பொருள்படும் θεος எனபதோடு:

எ–கா: ὁ υἱος του θεου = கடவுளின் மைந்தன்

(ஆ) பண்புப் பெயர்களோடு:

எ–கா: ἡ ἀγαπη = அன்பு
ἡ ἀδικια = அநீதி

(இ) "மனிதன்" என்று பொருள்படும் ἀνθρωπος எனும் சொல் பன்மையில் வரும் சில இடங்களில் எல்லா மனிதரையும் அல்லது முழு மனித குலத்தையும் குறிக்கும். அந்தப் பொருளில் வரும்போது, அதுவும் சிறப்புச் சுட்டினைப் பெறும்.

எ–கா: οἱ υἱοι των ἀνθρωπων = மனிதரின் குமாரர், அதாவது, முழு மனித குலமும்

6. <u>சொற்களின் ஒழுங்கு</u>: உடைமைப் பொருள் வேற்றுமையில் இருக்கும் ஒரு பெயர் இன்னொரு பெயரைத் தழுவி வரும்போது, அது இரண்டு இடங்களில் நிற்கலாம்:

(அ) அது தழுவி வந்த பெயருக்குப்பின்:

எ–கா: ἡ ἀγαπη <u>του θεου</u> = கடவுளின் அன்பு

(ஆ) அது தழுவி வந்த பெயருக்கும் அந்தப் பெயரின் சிறப்புச் சுட்டிற்கும் இடையே:

எ–கா: ὁ <u>του Χριστου</u> λογος = கிறிஸ்துவின் வார்த்தை

(இனிமேல் மாணவர் எழுதும் பயிற்சிகளில், பொதுவாகச் சிறப்புச் சுட்டினை ஒவ்வொரு பெயரோடும் சேர்ப்பது தகும்).

---

பயிற்சி 4, பக். 95 காண்க.

## (ஊ) இரண்டாம் இனப் பெயரடைகள் (Adjectives)

பெயரடை என்பது ஒரு பெயர்ச்சொல்லுக்கு அடைமொழியாக நிற்கும் ஒரு சொல். ஒரு பெயரடை, தான் தழுவி நிற்கிற பெயர்ச்

சொல்லால் குறிக்கப்பட்ட பொருள் எத்தகையது என்கிற கேள்விக்கு விடை அளிக்கிறது. தமிழில் நாம் அதற்கு ஒரு பெயரெச்சத்தைப் பயன்படுத்துவோம்.

எ–கா : ஒரு மனிதன்—எத்தகைய மனிதன் ?
ஒரு நல்ல மனிதன்

ஒரு கோயில் —எத்தகைய கோயில் ?
ஒரு பரிசுத்தமான கோயில்

தமிழில் நல்ல என்பதும் (பரிசுத்தம்) ஆன என்பதும் பெயரெச்சங்களே. அவை கிரேக்கத்தில் பெயரடைகளாகத் திருப்பப்படும்.

சிறப்புச் சுட்டைப் போல், பெயரடைகளும் வேற்றுமை பால் எண் இவற்றிற்கு ஏற்ற உருபுகளைப் பெறும். இரண்டாம் இனப் பெயரடைகள் இருவகைப்படும். முதல் வகை பகுதி ஈற்றில் ρ–அல்லாத மெய் கொண்டதும் (எ–கா : ἀγαθος) ; இரண்டாம் வகை பகுதி ஈற்றில் உயிர் அல்லது ρ–மெய் கொண்டதும் (எ–கா : ἁγιος) ஆகும்.

ἀγαθος = நல்ல

| ஒருமை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | ἀγαθος | ἀγαθη | ἀγαθον |
| விளி வேற். | ἀγαθε | ἀγαθη | ἀγαθον |
| செயப். வேற். | ἀγαθον | ἀγαθην | ἀγαθον |
| உடைமைப். வேற். | ἀγαθου | ἀγαθης | ἀγαθου |
| கொடைப். வேற். | ἀγαθῳ | ἀγαθῃ | ἀγαθῳ |
| பன்மை | | | |
| எழுவாய் வேற். | ἀγαθοι | ἀγαθαι | ἀγαθα |
| விளி வேற். | ἀγαθοι | ἀγαθαι | ἀγαθα |
| செயப். வேற். | ἀγαθους | ἀγαθας | ἀγαθα |
| உடைமைப். வேற். | ἀγαθων | ἀγαθων | ἀγαθων |
| கொடைப். வேற். | ἀγαθοις | ἀγαθαις | ἀγαθοις |

ἁγιος = பரிசுத்தமான

| ஒருமை | | | |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | ἁγιος | ἁγια | ἁγιον |
| விளி வேற். | ἁγιε | ἁγια | ἁγιον |
| செயப். வேற். | ἁγιον | ἁγιαν | ἁγιον |
| உடைமைப். வேற். | ἁγιου | ἁγιας | ἁγιου |
| கொடைப். வேற். | ἁγιῳ | ἁγιᾳ | ἁγιῳ |

| பன்மை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | ἁγιοι | ἁγιαι | ἁγια |
| விளி வேற். | ἁγιοι | ἁγιαι | ἁγια |
| செயப். வேற். | ἁγιους | ἁγιας | ἁγια |
| உடைமைப். வேற். | ἁγιων | ἁγιων | ἁγιων |
| கொடைப். வேற். | ἁγιοις | ἁγιαις | ἁγιοις |

குறிப்புக்கள் :

**1.** இந்த இரு வகைகளும் ஆண்பாலில் **λογος** என்பதன் உருபுகளையும் அலிப்பாலில் **ἐργον** என்பதன் உருபுகளையும் பெறும். பெண்பாலில் **ἀγαθος ἀρχη** என்பதன் உருபுகளையும் **ἁγιος ἡμερα** என்பதன் உருபுகளையும் பெறும்.

2. ஒரு பெயரடை தழுவி நிற்கிற பெயர் எந்த வேற்றுமையிலும் பாலிலும் எண்ணிலும் இருக்கிறதோ, அந்தப் பெயரடையும் அதே வேற்றுமையிலும் பாலிலும் எண்ணிலும் இருத்தல் வேண்டும்.

எ–கா : ἀγαθος ἀνθρωπος =(ஒரு) நல்ல மனிதன்
ἀγαθου ἀνθρωπου=(ஒரு) நல்ல மனிதனின்
ἁγιους προφητας =பரிசுத்தமான தீர்க்கதரிசிகளை
δικαια ἐντολη =(ஒரு) நீதியுள்ள கட்டளை

**3.** அடைமொழிக்குரிய இடம் : ஒரு பெயரடை ஒரு பெயருக்கு அடைமொழியாக வரும்போது, அது அந்தப் பெயரின் சிறப்புச் சுட்டைச் சார்ந்தே நிற்றல் வேண்டும்.

எ–கா : ὁ ἀγαθος μαθητης =(அந்த) நல்ல சீஷன்
ὁ μαθητης ὁ ἀγαθος=(அந்த) நல்ல சீஷன்

இந்த இரண்டுக்கும் வேறுபாடில்லை. இரண்டிலும் **ἀγαθος, μαθητης** என்பதன் சுட்டாகிய **ὁ** என்பதைச் சார்ந்து நிற்கிறது. இரண்டாவது உதாரணத்தில் μαθητης இரண்டு சுட்டுக்களைப் பெற்றுள்ளது எனக் காண்க. ἀγαθος இரண்டாவது சுட்டைச் சார்ந்து நின்றாலும் பொருளில் வேறுபாடில்லை.

பெயர்ச்சொல் சிறப்புச் சுட்டு இல்லாமல் வரும்போது, பெயரடை அந்தப் பெயருக்கு முன்னால் நின்றாலும் பின்னால் நின்றாலும், அது அப்பெயருக்கு அடைமொழியாக இருக்கும்.

எ–கா : ἀγαθος μαθητης / μαθητης ἀγαθος } = (ஒரு) நல்ல சீஷன்

4. பயனிலைக்குரிய இடம் : ஒரு பெயரடை தழுவி நிற்கிற பெயரின் சிறப்புச் சுட்டினைச் சாராமல் தனியாக நிற்கும்போது, அது அந்தப் பெயருக்கு அடைமொழி அன்று, பயனிலையே ஆகும்.

எ–கா : ὁ μαθητης ἀγαθος=(அந்தச்) சீஷன் நல்லவன்
ἀγαθος ὁ μαθητης=(அந்தச்) சீஷன் நல்லவன்

5. குறிப்பு வினையால் அணையும் பெயர்: ஒரு சிறப்புச் சுட்டும் பெயரடையும் பெயர்ச்சொல்லின்றிச் சேர்ந்து நிற்கும்போது, அவையே ஒரு விதப் பெயர்ச்சொல் ஆகும்.

எ—கா: οἱ ἁγιοι =பரிசுத்தவான்கள்

ἡ ἀγαθη=நல்லவள்

தமிழில் பெயர்விகுதி பெயரெச்சத்துடன் சேர்வதால் வினையால் அணையும்பெயர் உருவாகும் முறையை இதனோடு ஒப்பிடலாம்.

6. ஆண்பெண் பொதுப் பெயரடைகள் (two termination adjectives): 2—ஆம் இனப் பெயரடைகளில் சில ஆண்பாலிலும் பெண்பாலிலும் ஒரே உருபு வரிசையைப் பெறும். அதாவது, ஆண்பால் பெண்பாலுக்கும் பயன்படுத்தப்படும்.

எ—கா: ἡ ζωη ἡ αἰωνιος=நித்திய ஜீவன்

கூட்டுப் பெயரடைகள் (compound adjectives) சாதாரணமாக இந்த வகையைச் சேர்ந்தவை ஆகும்.

எ—கா: (ἀ+δυνατος) ἀδυνατος, ἀδυνατον=அசாத்தியமான

7. புறநடை: 2—ஆம் இனப் பெயரடைகளில் ஒரு சில விதிவிலக்காக உருபேற்கும்.

(அ) πολυς, πολλη, πολυ (=பல):

| ஒருமை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | πολυς | πολλη | πολυ |
| விளி வேற். | πολυς | πολλη | πολυ |
| செயப். வேற். | πολυν | πολλην | πολυ |
| உடைமைப். வேற். | πολλου | πολλης | πολλου |

(மீதி எல்லாம் πολλος, —η, —ον என்பதிலிருந்து பிறந்திருப்பதைப் போல)

(ஆ) μεγας, μεγαλη, μεγα (=பெரிய):

| ஒருமை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | μεγας | μεγαλη | μεγα |
| விளி வேற். | μεγας | μεγαλη | μεγα |
| செயப். வேற். | μεγαν | μεγαλην | μεγα |
| உடைமைப். வேற். | μεγαλου | μεγαλης | μεγαλου |

(மீதி எல்லாம் μεγαλος, —η, —ον என்பதிலிருந்து பிறந்திருப்பதைப் போல)

8. முதல்நிலை: ஒரு பெயரடையை அதன் ஆண்பால் பெண்பால் அலிப்பால் எழுவாய் வேற். ஒருமையையும் அதன் பொருளையும் கொண்டு குறிப்பிடுவது வழக்கம்.

| | | |
|---|---|---|
| எ—கா : | ἀγαθον, ἀγαθη, ἀγαθον, | = நல்ல |
| | (அல்லது ἀγαθος, —η, —ον, | = நல்ல) |
| | ἁγιος, —α, —ον, | = பரிசுத்த |
| | αἰωνιος, —ον, | = நித்திய |

அதன் எழுவாய் வேற். ஒருமையைக் கொண்டு, அது எவ்வாறு உருபேற்கும் எனத் தெரிந்து கொள்ளலாம் என்பது இந்த வழக்கத்தின் நோக்கமாம்.

9. உடைமைப் பெயரடைகள் (**possessive adjectives**) : இவை ஒரு பொருள் யாருடையது என உணர்த்துகின்றன. அவை இடப் பதிற் பெயர்களோடு தொடர்புடையனவாம் (பக். 48 காண்க).

| | | |
|---|---|---|
| ἐμος, ἐμη, ἐμον | = என், என்னுடைய | ἀγαθος போல |
| σος, ση, σον | = உன், உன்னுடைய | ἀγαθος போல |
| ἡμετερος, —α, —ον | = நம், எங்கள் | ἁγιος போல |
| ὑμετερος, —α, —ον | = உங்கள் | ἁγιος போல |

| | | |
|---|---|---|
| எ—கா : | το ἐμον τεκνον | = என் பிள்ளை |
| | ἡ κοινωνια ἡ ἡμετερα | = நம்முடைய ஐக்கியம் |

---

பயிற்சி 5. பக். 95 காண்க.

## (எ) சுட்டுப் பெயரடைகள் (Demonstrative Adjectives)

கிரேக்கத்தில் இரண்டு சுட்டுப் பெயரடைகள் உண்டு. அவை "அந்த" எனப் பொருள்படும் ἐκεινος என்பதும், "இந்த" எனப் பொருள்படும் οὑτος என்பதும் ஆகும். அவை மேற்கண்ட பெயரடைகளைப்போல வேற்றுமை பால் எண் இவற்றிற்கு ஏற்ற உருபுகளைப் பெறும்.

| ஒருமை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | ἐκεινος | ἐκεινη | ἐκεινο |
| செயப். வேற். | ἐκεινον | ἐκεινην | ἐκεινο |
| உடைமைப். வேற். | ἐκεινου | ἐκεινης | ἐκεινου |
| கொடைப். வேற். | ἐκεινῳ | ἐκεινῃ | ἐκεινῳ |
| **பன்மை** | | | |
| எழுவாய் வேற். | ἐκεινοι | ἐκειναι | ἐκεινα |
| செயப். வேற். | ἐκεινους | ἐκεινας | ἐκεινα |
| உடைமைப். வேற். | ἐκεινων | ἐκεινων | ἐκεινων |
| கொடைப். வேற். | ἐκεινοις | ἐκειναις | ἐκεινοις |

| ஒருமை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | οὑτος | αὑτη | τουτο |
| செயப். வேற். | τουτον | ταυτην | τουτο |
| உடைமைப். வேற். | τουτου | ταυτης | τουτου |
| கொடைப். வேற். | τουτῳ | ταυτῃ | τουτῳ |
| பன்மை | | | |
| எழுவாய் வேற். | οὑτοι | αὑται | ταυτα |
| செயப். வேற். | τουτους | ταυτας | ταυτα |
| உடைமைப். வேற். | τουτων | τουτων | τουτων |
| கொடைப். வேற். | τουτοις | ταυταις | τουτοις |

குறிப்புக்கள் :

1. எழுவாய் செயப்படுபொருள் வேற்றுமை அலிப்பால் ஒருமை யிலேயன்றி, இவற்றின் உருபுகள் எல்லாம் ἀγαθος என்பதன் உரு புகளைப் போன்றவையாகும்.

2. οὑτος என்பதன் பகுதி மாறி மாறி வருகிறது. ஆண்பாலிலும் பெண்பாலிலும் எழுவாய் வேற்றுமையில் τ-மெய் பகுதி முதலில் வரவில்லை. மேலும் உருபில் α அல்லது η வரும்போது, பகுதியில் ου எனும் இணையுயிருக்குப் பதிலாக αυ எனும் இணையுயிர் வருகிறது.

3. பொதுவாக இந்தச் சுட்டுப் பெயரடைகள் விளி வேற்றுமையில் வரா.

4. இந்தச் சுட்டுப் பெயரடைகள் அடைமொழிக்குரிய இடத்தில் அல்ல, பயனிலைக்குரிய இடத்தில் நிற்கும். அதாவது அவை தழுவி நிற்கும் பெயருக்கும் அதன் சிறப்புச் சுட்டுக்கும் இடையே அல்ல, அந்தப் பெயருக்குப்பின் அல்லது அதன் சுட்டுக்குமுன் நிற்கும்.

எ—கா : ἐκεινος ὁ ἀδελφος / ὁ ἀδελφος ἐκεινος } = அந்தச் சகோதரன்

ταυτα τα ἐργα / τα ἐργα ταυτα } = இந்தக் கிரியைகள்

5. ἐκεινος என்பதும் οὑτος என்பதும் ஒரு பெயரைத் தழுவா மல் தனியாய் நிற்கும்போது, அவை "அவன்" என்றும் "இவன்" என்றும் பொருள்படும் சுட்டுப் பதிற்பெயர்கள் ஆகும். அந்த முறை 50—ஆம் பக்கத்தில் விளக்கப்படும்.

---

பயிற்சி 6, பக். 96 காண்க.

## (ஏ) முன்னிடைச்சொற்கள் (Prepositions)

ஒரு கிரேக்கப் பெயரில் ஐந்தே வேற்றுமைகள் உண்டு. அந்த ஐந்து வேற்றுமைகளும் தராத வேறு பல அர்த்தங்கள், ஒரு தமிழ்ப்

பெயரின் எட்டு வேற்றுமைகளால் உணர்த்தப்படக் கூடும் (எ—கா : உடனி கழ்ச்சி, நீக்கற்பொருள், இடப்பொருள் முதலியன). அத்தகைய அர்த் தங்களை உணர்த்த, கிரேக்கத்தில் முன்னிடைச்சொல் எனும் ஒரு வகைச் சொற்கள் பெயர்களோடு பொருந்தி வரும். ஒரு முன்னிடைச்சொல் தான் சேர்ந்து வருகிற பெயருக்குமுன் நிற்றல் வேண்டும்; அந்தப் பெயர், முன்வந்த முன்னிடைச்சொல்லுக்குத் தக்க வேற்றுமையில் இருத்தல் வேண்டும்.

1. *εἰς* எனும் முன்னிடைச்சொல் ஓர் இடத்திற்குள்ளே வருதலைக் குறிக்கும். அதனோடு பொருந்தி நிற்கும் பெயர் செயப்படுபொருள் வேற்றுமையில் இருக்கும்.

எ—கா : வீட்டிற்குள் போனார்
**εἰς την οἰκιαν . . .**
கடவுள் குமாரனை உலகத்தில் அனுப்பினார்
**ὁ θεος τον υἱον εἰς τον κοσμον . . .**

(இரண்டாம் வாக்கியத்தில் "உள்" என்கிற வார்த்தை வரவில்லை எனினும், "உலகத்தில்" என்பதில் அப்பொருள் இருக்கிறதனால் கிரேக் கத்தில் "εἰς" என்பது வந்தது தகும்)

2. *προς* என்பது ஓர் இடத்திற்கு அல்லது ஓர் ஆளிடம் வருதலைக் குறிக்கும், அல்லது ஓர் இடத்தை நோக்கிச் செல்லுதலைக் குறிக்கும். அதனோடு பொருந்தி நிற்கும் பெயர் செயப்படுபொருள் வேற்றுமையில் இருக்கும்.

எ—கா : கிறிஸ்துவினிடம் வந்தான்
*προς τον Χριστον . . .*

*εἰς*, *προς* ஆகிய இவ்விரண்டு முன்னிடைச்சொற்களுக்கிடையிலுள்ள வேறுபாட்டைக் கீழ்க்காணும் படத்தைக் கொண்டு விளக்கலாம் :




3. **ἐκ** என்பது ஓர் இடத்திற்குள்ளிருந்து புறப்பட்டு நீங்குதலைக் குறிக்கும். அதனோடு பொருந்தி வரும் பெயர் உடைமைப் பொருள் வேற்றுமையில் நிற்கும்.

எ—கா : வீட்டிலிருந்து புறப்பட்டுப் போனான்
**ἐκ της οἰκιας . . .**

4. *ἀπο* என்பது ஓர் இடத்திலிருந்து அல்லது ஓர் ஆளிடமிருந்து நீங்குதலைக் குறிக்கும். அதனோடு பொருந்தி வரும் பெயர் உடைமைப் பொருள் வேற்றுமையில் நிற்கும்.

எ—கா : அவன் இந்த ஞானத்தைக் கடவுளிடமிருந்து
பெற்றுக் கொண்டான்
. . . ἀπο του θεου . . .
அவர்கள் கலிலேயாவிலிருந்து வந்தனர்
. . . ἀπο της Γαλιλαιας . . .

*ἐκ, ἀπο* ஆகிய இவ்விரண்டு முன்னிடைச்சொற்களுக்கிடையுள்ள வேறுபாட்டைக் கீழ்க்காணும் படத்தைக் கொண்டு விளக்கலாம் :




5. *ἐν* என்பது ஓர் இடத்தில் (அல்லது ஓர் இடத்திற்குள்) இருத்தலைக் குறிக்கும். அதனோடு பொருந்தி வரும் பெயர் கொடைப் பொருள் வேற்றுமையில் நிற்கும்.

எ—கா : அவர்கள் வீட்டில் இருக்கிறார்கள்
. . . ἐν τῃ οἰκιᾳ . . .

இந்த ஐந்து முன்னிடைச்சொற்கள் பயன்படுத்தப்படுகின்ற முறையை நோக்குமிடத்து, கிரேக்கப் பெயர்ச்சொல் வேற்றுமைகள் தரும் பொருளைப் பற்றிச் சில காரியங்களை அறியலாம். குறிப்பிட்ட சில முன்னிடைச்சொற்கள் முன்னிற்கும்போது, செயப்படுபொருள் வேற்றுமை இடமாற்றப் பொருளையும் உடைமைப் பொருள் வேற்றுமை நீக்கற் பொருளையும் கொடைப் பொருள் வேற்றுமை இடப்பொருளையும் உணர்த்தும். தமிழில் நான்காம் வேற்றுமை இடமாற்றப் பொருளைத் தருகிறது ஆயினும் (எ—கா : அவன் ஊருக்கு வந்தான்), சில இடங்களில் அதற்கு ஒப்பாயிருக்கும் கிரேக்கக் கொடைப் பொருள் வேற்றுமை அந்தப் பொருளைத் தராது. இடமாற்றப் பொருளை உணர்த்த, கிரேக்கத்தில் செயப்படுபொருள் வேற்றுமையோடு பொருந்தி நிற்கும் ஒரு முன்னிடைச்சொல் பயன்படுத்தப்படல் வேண்டும் என்பது கவனிக்கத் தக்கது. மேலும் ஒரு கிரேக்க முன்னிடைச்சொல் வரும் எல்லா இடங்களிலும், அது ஒரே தமிழ்ச் சொல்லால் மொழிபெயர்க்கப்பட முடியாது. அது மொழிபெயர்க்கப்படும் விதம் அது வருகிற •வாக்கியத்தைப் பொறுத்ததாகும் (எ—கா : *εἰς* சில சமயம் உள் என்பதாலும், சில சமயம் –இல் என்பதாலும், சில சமயம் –கு என்பதாலும் மொழி பெயர்க்கப்படலாம்).

நாம் இன்னும் சில முன்னிடைச்சொற்களைக் கவனிப்போம். இவை எல்லாம் ஒரே ஒரு வேற்றுமையோடு மட்டும் அல்ல, வெவ்வேறு வேற்றுமைகளோடு வரக்கூடும். அவை வேறொரு வேற்றுமையோடு வருங்கால், வேறு பொருளைத் தரும்.

6. *παρα* : செயப். வேற். ஓடு=ஓரமாய் (+இடமாற்றத்தைக்குறிக்கும் ஒரு வினை).

எ–கா : கடலோரமாய் நடந்து சென்றான்
*παρα την θαλασσαν . . .*

உடைமைப். வேற். ஓடு=(ஓர் ஆள்) இடமிருந்து (≃ *ἀπο*).

எ–கா : கடவுளிடமிருந்து வந்த ஒரு மனிதன்
*παρα του θεου . . .*

கொடைப். வேற். ஓடு=(ஓர் ஆள்) பக்கத்தில், கிட்ட (இடப்பொருளில்).

எ–கா : அவன் அந்தச் சகோதரனுக்குப் பக்கத்தில்
நின்று கொண்டிருந்தான்
. . . *παρα ἐκεινῳ τῳ ἀδελφῳ . . .*

7. *ἐπι* : செயப். வேற். ஓடு=மேலே (+இடமாற்றத்தைக் குறிக்கும் ஒரு வினை).

எ–கா : விதை தரையிலே விழுந்தது ;
. . . *ἐπι την γην . . .* ;
கடலின்மேல் நடந்தான்
*ἐπι την θαλασσαν . . .*

உடைமைப். வேற். ஓடு=(ஓர் ஆள் வாழ்ந்த) காலத்தில்.

எ–கா : எலியா தீர்க்கதரிசியின் காலத்தில் (நாட்களில்)
*ἐπι Ἠλειου του προφητου*

கொடைப். வேற். ஓடு=மேலே (இடப்பொருளில்).

எ–கா : கற்பாறையின்மேல் நின்றுகொண்டிருந்தான்
*ἐπι τῃ πετρᾳ . . .*

8. *δια* : செயப். வேற். ஓடு=காரணமாக : *δια την ἁμαρτιαν*
பாவத்தின் காரணமாக

உடைமைப். வேற். ஓடு=வழியாக ; கொண்டு : *δια της Γαλιλαιας*
கலிலேயா நாட்டின் வழியாக
*δια του υἱου*
குமாரனைக் கொண்டு

9. *κατα* : செயப். வேற். ஓடு=படி : *κατά την ἐντολην* கட்டளையின்படி

உடைமைப். வேற். ஓடு=விரோதமாக : *κατα του Χριστου* கிறிஸ்துவுக்கு விரோதமாக

10. *μετα* : செயப். வேற். ஓடு=பிறகு : *μετα τουτον τον βιον* இந்த வாழ்க்கைக்குப் பிறகு

உடைமைப். வேற். ஓடு=உடன், ஓடு : *μετα των ἀδελφων* சகோதரர்களோடு

11. *περι* : செயப். வேற். ஓடு=சுற்றிலும் : *περι την οἰκιαν* வீட்டைச் சுற்றிலும்

உடைமைப். வேற். ஓடு=பற்றி : *περι της ζωης της αἰωνιου* நித்திய ஜீவனைப் பற்றி

12. *ὑπερ* : செயப். வேற். ஓடு=அப்பாலே, மிஞ்சி : *ὑπερ τον λογον του θεου* கடவுளின் வார்த்தைக்கு மிஞ்சி

உடைமைப். வேற். ஓடு=பொருட்டாக : *ὑπερ των ἀδελφων* சகோதரர்பொருட்டாக (அல்லது நிமித்தம்)

13. *ὑπο* : செயப். வேற். ஓடு=கீழே : *ὑπο του οὐρανου*[*] வானத்தின் கீழே

உடைமைப். வேற். ஓடு=ஆல் (3—ஆம். வேற்.) : *ὑπο του θεου* கடவுளால் (இரட்சிக்கப்பட்டவர்கள்)

பின்வருகிற முன்னிடைச்சொற்கள் ஒரே வேற்றுமையோடு நிற்கக் கூடியவை :

14. *ἐμπροσθεν*
15. *ἐνωπιον*
} உடைமைப். வேற். ஓடு=முன்பாக (இடப்பொருள்), (ஓர் ஆளின்) பார்வையில்

*ἐνωπιον* (அல்லது *ἐμπροσθεν*) *του θεου*
கடவுளுக்குமுன்பாக, அல்லது கடவுளின் பார்வையில்

16. *χαριν* : உடைமைப். வேற். ஓடு=பொருட்டாக, நிமித்தம் (*ὑπερ* + உடைமைப். வேற். காண்க)

---

[*] பயிற்சி 7, பக். 97 காண்க.

# அதிகாரம் 3

## வினையியல் (i)

கிரேக்க வினைகளில் ஐந்து முக்கியமான கூறுபாடுகள் உண்டு :

1. வினைநிலை (voice): செய்வினை (active) செயப்பாட்டு வினை (passive) தற்பொருட்டு வினை (middle) ஆகிய மூன்று வினைநிலைகள் உண்டு. அடிக்கிறேன் என்பது செய்வினை, அடிக்கப்படுகிறேன் என்பது செயப்பாட்டுவினை. தற்பொருட்டு வினை என்பதன் பொருளும் வழக்கும் பின்னால் விளக்கப்படும் (பக். 37 காண்க).

2. காலம் (tense): ஆறு காலங்கள் உண்டு. அவையாவன :

| | | | |
|---|---|---|---|
| நிகழ்காலம் | (present) | இறந்த காலத் தொடர்ச்சி | (imperfect) |
| எதிர்காலம் | (future) | இறந்த காலத் தனிப்பு | (aorist) |
| நிகழ்கால நிறைவு | (perfect) | இறந்த கால நிறைவு | (pluperfect) |

3. வினைப் பாங்கு (mood): தமிழில் மூன்று காலங்களில் ஒவ்வொன்றிலும் தெரிநிலை வினை முற்று வினையெச்சம் பெயரெச்சம் ஆகியவை இருப்பதுபோல், கிரேக்கத்தில் ஒவ்வொரு காலத்திலும் வெவ்வேறான வினைப் பாங்குகள் வரக் கூடும். அந்தப் பாங்குகள், சாற்றுப் பாங்கு (indicative), ஏவற் பாங்கு (imperative), சார்புநிலைப் பாங்கு (subjunctive), வியங்கோட் பாங்கு (optative), செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சம் (infinitive), பெயரெச்சம் (participle) என்பவையே. இறந்த காலத் தொடர்ச்சியிலும் இறந்த கால நிறைவிலும் சாற்றுப் பாங்கினைத் தவிர வேறெந்தப் பாங்கும் இல்லை என்பது கவனிக்கத் தக்கது. இந்த வினைப் பாங்குகளின் பொருளும் வழக்கும் பின்வரும் பாடங்களில் விரிவாக விளக்கப்படும்.

4. எண் (number): தமிழில் உளது போலக் கிரேக்கத்திலும் ஒருமை பன்மை ஆகிய இரண்டு எண்கள் உண்டு.

5. இடம் (person): தன்மை (first person), முன்னிலை (second person), படர்க்கை (third person), ஆகிய மூன்று இடங்கள் ஒருமையிலும் பன்மையிலும் உண்டு. பால் வேறுபாட்டைக் காட்டும் சிறப்பு விகுதிகள் படர்க்கையில் இல்லை. கிரேக்கப் படர்க்கை விகுதிகள் மூன்று பாலுக்கும் பொது.

## (அ) செய்வினை நிகழ்காலச் சாற்றுப் பாங்கு
## (Present Indicative Active)

அவிழ்க்கிறேன் எனப் பொருள்படும் λυω எனும் வினை எல்லாக் காலங்களிலும் விதிப்படி உருவெடுக்கும். ஆதலால் அதுவே வினை யியலில் வாய்பாடாகக் கொள்ளப் படுகிறது.

| | | |
|---|---|---|
| ஒருமை | | |
| தன்மை | λυ ω | அவிழ்க்கிறேன் |
| முன்னிலை | λυ εις | அவிழ்க்கிறாய் |
| படர்க்கை | λυ ει | அவிழ்க்கிறான், —றாள், —றது |
| பன்மை | | |
| தன்மை | λυ ομεν | அவிழ்க்கிறோம் |
| முன்னிலை | λυ ετε | அவிழ்க்கிறீர்கள் |
| படர்க்கை | λυ ουσι(ν) | அவிழ்க்கிறார்கள் |

குறிப்புக்கள் :

1. உருவெடுக்கும் முறை : λυ என்பது பகுதி : ω முதலியன விகுதிகள். நிகழ்காலத்தில் விகுதிகள் இடைநிலையின்றி இயல்பாகப் பகுதியோடு சேரும். λυ என்கிற பகுதி தனியாக நிற்க இயலாது ; விகுதியோடே சேர்ந்து நிற்றல் வேண்டும். λυω என்கிற செய்வினை நிகழ்காலச் சாற்றுப் பாங்கின் தன்மை ஒருமை இவ்வினையின் முதல் நிலை ஆகும், அவ்வாறே எந்த வினையும் அகராதியில் காணப்படும்.

2. சாற்றுப் பாங்கு : இந்த வினைப் பாங்கு தமிழ்த் தெரிநிலை வினைமுற்றைப் போன்றதாகும். அது ஐயப்பாடின்றி ஒரு நிகழ்ச்சியை சாற்றுகிறபடியால் இப்பெயரைப் பெற்றது.

3. பொருள் : மேலே காட்டியதுபோல, λυω என்பது "அவிழ்க் கிறேன்" எனப் பொருள்படும். கிரேக்கத்தில் ஒரு தனி நிகழ்காலத் தொடர்ச்சி (continuous present) இல்லாததால், λυω என்பது சில சமயம் "அவிழ்த்துக்கொண்டிருக்கிறேன்" என்கிற பொருளிலும் வரும். மாணவர் அந்தந்த இடத்தில் எந்தப் பொருள் பொருந்தும் எனக் கண்டுகொண்டு அதற்கேற்ப மொழிபெயர்த்தல் வேண்டும்.

4. தோன்றல் ν : செய்வினை நிகழ்காலச் சாற்றுப் பாங்கின் படர்க்கைப் பன்மை விகுதி ουσι என்பதாகும். வருமொழி முதலில் உயிர் நிற்கும்போது, அந்த விகுதிக்குப்பின் ν-மெய் தோன்றும். மெய் வரினும், அவ்வாறே தோன்றலாம்.

எ-கா : λυουσιν ἀδελφον

ஒரு சகோதரனை அவிழ்க்கிறார்கள் (அதாவது, விடுதலை செய்கிறார்கள்)

5. <u>மரியாதை</u>: தமிழில் ஒரு பெரியவரோடு பேசும்போது, ஆய் என்கிற முன்னிலை ஒருமை விகுதியைப் பயன்படுத்துவது தகாது; மரியாதைக்காகப் பன்மை விகுதிகளைப் பயன்படுத்தல் வேண்டும். கிரேக்கத்திலோ ஒருமையில் மரியாதைக் குறைச்சல் ஒன்றும் இல்லை; அது யாரையாயினும் குறிக்கப் பயன்படுத்தப்படும்.

6. <u>தோன்ரு எழுவாய்</u>: ஒரு வினையின் சாற்றுப் பாங்கோடு ஒரு பெயர்ச்சொல் அல்லது பதிற்பெயர்ச்சொல் எழுவாயாக வருவது அவசியமில்லை. அந்த வினைச் சொல்லின் விகுதி தமிழிற்போல அதன் எழுவாய் யாதெனக் காட்டுகிறது.

7. <u>சொற்களின் ஒழுங்கு</u>: தமிழில் ஒரு வினை முற்று வாக்கியத்தின் கடைசியில் நிற்பது வழக்கம். கிரேக்கத்தில் அத்தகைய விதி இல்லை. எழுவாய் வினைச் சொல் முதலியன எந்த இடத்திலாவது வரக் கூடும். பெயர்களின் உருபுகளையும் வினைகளின் விகுதிகளையும் கவனித்து, எது எழுவாய் எது பயனிலை என்பதைக் கண்டு கொள்ளலாம்.

எ—கா: *ὁ θεος τους ἀνθρωπους σωζει*
*ὁ θεος σωζει τους ἀνθρωπους*
*τους ἀνθρωπους ὁ θεος σωζει*
*σωζει τους ἀνθρωπους ο θεος,* முதலியன

இவை எல்லாம் இலக்கணப்படியான கிரேக்க வாக்கியங்கள். எல்லாவற்றிலும் "கடவுள் மனிதர்களை இரட்சிக்கிருர்" என்கிற ஒரே பொருள் உண்டு. சொற்களின் ஒழுங்கு மாறியதால், கருத்து வெவ்வேருக வலியுறுத்தப்படுகிறது. வேறு வித்தியாசம் ஒன்றும் இல்லை.

8. <u>படர்க்கை</u>: படர்க்கையில் ஒவ்வொரு பாலுக்கும் ஒவ்வொரு தனி விகுதி இல்லை. ஒருமையிலும் பன்மையிலும் படர்க்கை விகுதிகள் மூன்று பாலுக்கும் பொது. எழுவாய் பன்மை ஆயின், பயினிலையும் பன்மை ஆகும் என்பது பொது விதி. எனினும் அலிப்பால் பன்மை எழுவாய் படர்க்கை ஒருமை விகுதியைப் பெறும்.

எ—கா: *τα τεκνα ἐν τῃ οἰκιᾳ <u>μενει</u>*
பிள்ளைகள் வீட்டில் நிலைத்திருக்கிருர்கள்

9. <u>எதிர்மறை வாக்கியங்கள்</u>: *οὐ* என்பது ஒரு வாக்கியத்தில் வரும்போது, அந்த வாக்கியம் எதிர்மறையாக மாறுகிறது.

எ—கா: *τους λογους του Χριστου ἀκουουσιν*
கிறிஸ்துவின் வார்த்தைகளைக் கேட்கிருர்கள்
*τους λογους του Χριστου <u>οὐκ</u> ἀκουουσιν*
கிறிஸ்துவின் வார்த்தைகளை (அவர்கள்) கேட்கிறதில்லை

வரும் மொழி முதலில் மென்மூச்சொலிக்குறியைப் பெற்ற ஓர் உயிர் நிற்கும்போது, οὐ என்பது ஈற்றில் κ–மெய்யைத் தோன்றப் பெறும் (மேற்கூறிய எடுத்துக் காட்டில் கண்டதுபோல). வரும் மொழி முதலில் வன்மூச்சொலிக்குறியைப் பெற்ற ஓர் உயிர் நிற்கும்போது, οὐ என்பது ஈற்றில் χ–மெய்யைத் தோன்றப் பெறும் (οὐχ).

சாற்றுப் பாங்கு வினைகளுடன் οὐ என்பது எதிர்மறைப் பொருளில் வரும். ஏனைய வினைப் பாங்குகளுடன் μη எனும் சொல் அதே பொருளில் வரும் (5–ஆம் அதிகாரத்தைக் காண்க).

οὐ என்பதும் μη என்பதும் மற்ற இடைச் சொற்களுடன் சேர்ந்து கூட்டு எதிர்மறைச் சொற்களாகப் பயன்படும்.

எ–கா : οὐδεις, μηδεις = ஒருவரும் இல்லை (பக். 47 காண்க)
οὐδε, μηδε = . . . உம் இல்லை (δε, பக். 77 காண்க)
οὔπω, (μηπω) = இன்னும் இல்லை

<u>οὐδε</u> ὁι ἀγγελλοι πιστευουσιν = தேவதூதர்க<u>ளும்</u> விசுவாசிக்கிற <u>தில்லை.</u>

---

பயிற்சி 8, பக். 98 காண்க.

## (ஆ) செய்வினை இறந்த காலத் தொடர்ச்சி சாற்றுப் பாங்கு (Imperfect Indicative Active)

ஒருமை

| | | | | |
|---|---|---|---|---|
| தன்மை | ἐ | λυ | ον | அவிழ்த்துக்கொண்டிருந்தேன் |
| முன்னிலை | ἐ | λυ | ες | அவிழ்த்துக்கொண்டிருந்தாய் |
| படர்க்கை | ἐ | λυ | ε (ν) | அவிழ்த்துக்கொண்டிருந்தான், —தாள், —தது |

பன்மை

| | | | | |
|---|---|---|---|---|
| தன்மை | ἐ | λυ | ομεν | அவிழ்த்துக்கொண்டிருந்தோம் |
| முன்னிலை | ἐ | λυ | ετε | அவிழ்த்துக்கொண்டிருந்தீர்கள் |
| படர்க்கை | ἐ | λυ | ον | அவிழ்த்துக்கொண்டிருந்தார்கள் |

<u>குறிப்புக்கள் :</u>

1. <u>உருவெடுக்கும் முறை</u> : மேலே காட்டினதுபோல இந்த வினையில் மூன்று கூறுபாடுகள் உண்டு :

(அ) ε எனும் முன்னொட்டுப் (augment) பகுதிக்குமுன் நிற்கிறது

(ஆ) λυ எனும் பகுதி

(இ) ον முதலிய விகுதிகள் பகுதியோடு இயல்பாகச் சேர்ந்திருக்கின்றன

2. பொருள் : இந்த வினை இறந்த காலத்தில் தொடர்ந்து அல்லது வழக்கமாகச் செய்யப்பட்ட ஒரு செயலைக் குறிக்கும். சில சமயம் ἔλυον என்பது "அவிழ்க்க முயன்றேன்" என்றும் "அவிழ்க்கத் தொடங்கினேன்" என்றும் பொருள்படலாம். எனினும் சாதாரணமாக அதனை "அவிழ்த்துக்கொண்டிருந்தேன்" என்று மொழி பெயர்ப்பது பொருந்தும்.

3. விகுதிகள் : இறந்த காலத் தொடர்ச்சியின் விகுதிகளில், தன்மை முன்னிலை பன்மை விகுதிகள் மட்டும் நிகழ்காலத்தின் விகுதிகளைப் போன்றவை ஆகும். மற்ற நான்கும் சற்று வேறுபட்டுக் காணப்படுகின்றன. படர்க்கை ஒருமையில் தோன்றல் ν–மெய் வரும் என்று கவனித்தல் வேண்டும்.

4. முன்னொட்டு : எல்லா இறந்த காலச் சாற்றுப் பாங்குகளிலும் வினைப் பகுதிமுன் ἐ எனும் இறந்த கால முன்னொட்டு நிற்கும். பகுதி முதலில் உயிர் நிற்கும்போது முன்னொட்டு விகாரமாக அதனோடு புணரும்.

| பகுதி முதல் உயிர் | | விகாரம் | எடுத்துக் காட்டு | | |
|---|---|---|---|---|---|
| ε + α | → | η | ἀκουω | → | ἤκουον |
| ε + ε | → | η | ἐγειρω | → | ἤγειρον |
| ε + ο | → | ω | ὁμολογεω | → | ὡμολογουν * |
| ε + αι, ει | → | ῃ | αἰτεω | → | ᾔτουν * |
| ε + οι | → | ῳ | οἰκοδομεω | → | ᾠκοδομουν * |
| ε + αυ, ευ | → | ηυ | εὑρισκω | → | ηὕρισκον |

முன்னொட்டு, பகுதிமுதல் உயிரோடு புணரும்போது, அவ்வுயிர் நெடிலாகும், இயோற்ற கீழே போகும் என்பது இதன் பொது விதி.

---

பயிற்சி 9, பக். 99 காண்க.

## (இ) கூட்டு வினைகள் (Compound Verbs)

தமிழில் ஓர் இடைச்சொல் ஒரு வினைச்சொல்லோடு சேர்ந்து நிற்பதால், அவ்வினைச்சொல்லின் பொருள் வேறுபடும் (எ–கா : முன்வருதல், வெளிப்படுதல், பின்வாங்குதல்). அது போல் கிரேக்கத்திலும்

---

* ουν என்பது எவ்வாறு வந்தது என்று 26–ஆம் பக்கத்தில் விளக்கப்படும். இங்கு இவ்வினைகளின் பகுதிமுதல் உயிர் திரிந்ததை மட்டும் கவனிக்கவும்.

ஒரு முன்னிடைச்சொல் ஒரு வினைச்சொல்லோடு சேர்ந்து நிற்கலாம். அப்படி உண்டாகும் வினைச்சொல்லுக்குக் கூட்டு வினை என்று பெயர். முன்னிடைச்சொல் வினைச்சொல்லோடு பொருந்தியதால், அவ் வினைச் சொல்லின் பொருள் பின்வரும் வகைகளில் மாறலாம் :

1. சிலவற்றில், தனியாக நிற்கிற முன்னிடைச்சொல்லிலும் வினையிலும் என்னென்ன பொருள் இருக்கிறதோ, அதே பொருள் கூட்டு வினையிலும் இருக்கிறது.

எ—கா : ἐκ = உள்ளிருந்து, வெளியே
βαλλω = எறிகிறேன்
ἐκβαλλω = வெளியே எறிகிறேன், புறம்பே தள்ளுகிறேன்

2. வேறு சிலவற்றில், முன்னிடைச்சொல் வினையின் பொருளை அதிகமாக மாற்றாமல் சற்றுப் பலப்படுத்துகிறது.

எ—கா : λυω = அவிழ்க்கிறேன்
ἀπολυω = விடுதலை செய்கிறேன்
ἀγγελλω = அறிவிக்கிறேன்
ἀπαγγελλω = அறிவிக்கிறேன்

(ἀπο என்பதன் ஈற்று உயிர் ἀγγελλω என்பதன் முதல் உயிரோடு புணர்ந்து கெட்டு விட்டது எனக் காண்க)

3. வேறு சிலவற்றில், முன்னிடைச்சொல் பொருந்தியதால், வினையின் பொருள் முற்றிலும் மாறுகிறது.

எ—கா : γινωσκω = அறிகிறேன்
ἀναγινωσκω = வாசிக்கிறேன்

கூட்டு வினைகளின் இறந்த காலத் தொடர்ச்சியில், இறந்த கால முன்னொட்டு முன்னிடைச்சொல்லுக்கும் வினைப் பகுதிக்கும் இடையில் வந்து சேரும். அவ்வாறு சேரும்போது, முன்னிடைச்சொல்லின் ஈற்று உயிர் கெடும் ; ἐκ என்பது ἐξ என்பதாகத் திரியும்.

எ—கா : ἐκ + ε + βαλλ + ον = ἐξεβαλλον
ἀπο + ε + λυ + ον = ἀπελυον
ἀπο + ε + ἀγγελλ + ον = ἀπηγγελλον
(புறநடை : περι + ε + πατε + ον = περιεπατουν)

---

பயிற்சி 10, பக். 100 காண்க.

## (ஈ) குறுகிய வினைகள் (Contracted Verbs)

சில வினைப் பகுதிகள் ε–உயிரை ஈறாகக் கொண்டுள்ளன. விகுதி அதனோடு சேரும்போது, புணர்ச்சி விகாரமாக உண்டாகும்.

செய்வினை நிகழ்காலச் சாற்றுப் பாங்கு

| பகுதி | விகுதி | | விகாரம் | பொருள் |
|---|---|---|---|---|
| φιλε + | ω | = | φιλω | நேசிக்கிறேன் |
| φιλε + | εις | = | φιλεις | நேசிக்கிறாய் |
| φιλε + | ει | = | φιλει | நேசிக்கிறான் (முதலியன) |
| φιλε + | ομεν | = | φιλουμεν | நேசிக்கிறோம் |
| φιλε + | ετε | = | φιλειτε | நேசிக்கிறீர்கள் |
| φιλε + | ουσι (ν) | = | φιλουσι (ν) | நேசிக்கிறார்கள் |

செய்வினை இறந்த காலத் தொடர்ச்சிச் சாற்றுப் பாங்கு

| | | | | |
|---|---|---|---|---|
| ἐ+φιλε + | ον | = | ἐφιλουν | நேசித்துக்கொண்டிருந்தேன் |
| ἐ+φιλε + | ες | = | ἐφιλεις | நேசித்துக்கொண்டிருந்தாய் |
| ἐ+φιλε + | ε | = | ἐφιλει | நேசித்துக்கொண்டிருந்தான் (முதலியன) |
| ἐ+φιλε + | ομεν | = | ἐφιλουμεν | நேசித்துக்கொண்டிருந்தோம் |
| ἐ+φιλε + | ετε | = | ἐφιλειτε | நேசித்துக்கொண்டிருந்தீர்கள் |
| ἐ+φιλε + | ον | = | ἐφιλουν | நேசித்துக்கொண்டிருந்தார்கள் |

இந்தப் புணர்ச்சி மூன்று விதிகளின்படி உண்டாகிறது :

1. ε பின் ε வரும்போது, இரண்டும் சேர்ந்து ει ஆகத் திரியும் ; ε+ε = ει
2. ε பின் ο வரும்போது, இரண்டும் சேர்ந்து ου ஆகத் திரியும் ; ε+ο = ου
3. ε பின் நெடில் அல்லது இணையுயிர் வரும்போது, ε கெடும். ε+ { நெடில் / இணையுயிர் } = ε கெடும்

குறிப்புக்கள் :

1. வினைப்பகுதிகளின் உயிரீற்றுப் புணர்ச்சி உண்டாகும் விதம் வேறு, இறந்த கால முன்னொட்டு பகுதி முதலில் நிற்கும் உயிரோடு புணரும் விதம் வேறு என்பது கவனிக்கத் தக்கது.

2. அகராதியில் இவ் வினைகள் புணர்ச்சி ஆகாத உருவத்தில் காணப்படும் (அதாவது, "φιλεω"). வாக்கியங்களில் பயன்படுத்தப்படும் போதோ, அவை விகாரப்பட்ட உருவத்தில் எழுதப்படல் வேண்டும் (அதாவது, "φιλω").

---

பயிற்சி 11, பக். 100 காண்க.

## (உ) செய்வினை எதிர்காலச் சாற்றுப் பாங்கு (Future Indicative Active)

செய்கிறேன் என்பது நிகழ்காலம், செய்வேன் என்பது எதிர்காலம். எதிர்கால வினைச்சொல் எதிர்காலத்தில் செய்யப்படப் போகிற ஒரு செயலைக் குறிக்கிறது. கிரேக்கத்தில் செய்வினை எதிர்காலச் சாற்றுப் பாங்கு, வினைப் பகுதிக்கும் விகுதிக்கும் இடையிலே σ எனும் இடைநிலை பொருந்தி நிற்பதால் உருவெடுக்கும்.

| பகுதி | | இடைநிலை | | விகுதி | | எதிர்காலம் | பொருள் |
|---|---|---|---|---|---|---|---|
| λυ | + | σ | + | ω | = | λυσω | அவிழ்ப்பேன் |
| λυ | + | σ | + | εις | = | λυσεις | அவிழ்ப்பாய் |
| λυ | + | σ | + | ει | = | λυσει | அவிழ்ப்பான் (முதலியன) |
| λυ | + | σ | + | ομεν | = | λυσομεν | அவிழ்ப்போம் |
| λυ | + | σ | + | ετε | = | λυσετε | அவிழ்ப்பீர்கள் |
| λυ | + | σ | + | ουσι(ν) | = | λυσουσι(ν) | அவிழ்ப்பார்கள் |

இவ்விகுதிகள் நிகழ்காலத்தில் வந்த விகுதிகளே. σ எனும் இடைநிலை வந்ததேயொழிய, இதற்கும் நிகழ்காலத்திற்கும் இடையே வேறு வித்தியாசம் இல்லை. கீழ்க்காணும் வினைகளின் எதிர்காலம் உருவெடுக்கும் முறை கவனிக்கத் தக்கது :

1. பகுதியின் ஈறாக மெய்யெழுத்தைக் கொண்டுள்ள வினைகள் : σ எனும் இடைநிலை இவ்வினைகளின் பகுதி ஈற்று மெய்யோடு சேரும் போது, விகாரப் புணர்ச்சி கீழ்க்காணுமாறு உண்டாகும் :

| பகுதி ஈற்று மெய் | | இடைநிலை | | திரிபு | எ–கா : | | |
|---|---|---|---|---|---|---|---|
| σσ, κ, γ, χ | + | σ | = | ξ | διωκ+σ+ω | = | διωξω |
| ττ, π, β, φ | + | σ | = | ψ | βλεπ+σ+ω | = | βλεψω |
| ζ, τ, δ, σ | + | σ | = | σ | σωζ+σ+ω | = | σωσω |

2. குறுகிய வினைகள் : φιλεω போன்ற வினைகளின் எதிர்காலத்தில், பகுதி ஈற்றில் நிற்கிற குறில் σ எனும் இடைநிலைக்குமுன் நெடிலாகும்.

எ–கா : φιλεω : φιλη + σ + ω = φιλησω
ποιεω : ποιη + σ + ω = ποιησω

3. λ, ν, ρ ஆகிய மெய்களில் ஒன்றைப் பகுதி ஈறாகக் கொண்டுள்ள வினைகள் : இவற்றின் எதிர்காலம் உருவெடுக்கும் முறையில், மூன்று காரியங்களைக் கவனித்தல் வேண்டும் :

(அ) σ எனும் இடைநிலை வராது

(ஆ) அதற்குப் பதிலாக, வினைப் பகுதியில் மாறுதல் உண்டாகும். அது எப்படி உண்டாகும் என்பதற்கு விதி இல்லை. ஒவ்வொரு வினையிலும் ஒவ்வொரு வகையில் உண்டாகும்

(இ) அவ்வாறு மாறிய பகுதியின் ஈற்று மெய்க்குப் பின் ϵ தோன்றும். ஆதலால் விகுதி அதனோடு சேரும்போது, *φιλεω* என்பதின் நிகழ்காலத்தில் விகாரப் புணர்ச்சி உண்டானதுபோல, இங்கும் விகாரப் புணர்ச்சி உண்டாகும்

எ—கா :

| நிகழ்காலம் | | பகுதி மாற்றம் | | ϵ தோன்றல் | | விகுதி | | எதிர்காலம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| *βαλλω* | : | *βαλ* | + | ϵ | + | ω | = | *βαλω* |
| *στελλω* | : | *στελ* | + | ϵ | + | ω | = | *στελω* |
| *ἀγγελλω* | : | *ἀγγελ* | + | ϵ | + | ω | = | *ἀγγελω* |
| *κρινω* | : | *κριν** | + | ϵ | + | ω | = | *κρινῶ** |
| *μενω* | : | *μεν** | + | ϵ | + | ω | = | *μενῶ** |
| *αἰρω* | : | *ἀρ* | + | ϵ | + | ω | = | *ἀρω* |
| *ἐγειρω* | : | *ἐγερ* | + | ϵ | + | ω | = | *ἐγερω* |

இவை விகுதி ஏற்குமுறை பின்வருமாறு :

| | |
|---|---|
| *βαλω* | *βαλουμεν* |
| *βαλεις* | *βαλειτε* |
| *βαλει* | *βαλουσι(ν)* |

* *μενω, κρινω* என்பவற்றின் எதிர்காலத்தில், பகுதி மாறவில்லை. ஆகவே அவற்றின் நிகழ்காலமும் எதிர்காலமும் ஒன்று போல் தோன்றும். எதிர்காலத்தில் விகாரப் புணர்ச்சி உண்டானதால், தன்மைப் பன்மையிலும் முன்னிலைப் பன்மையிலும் மட்டும் வேறுபாடு இருக்கும்.

இது ஒலியழுத்தக்குறிகளைக் கவனிக்க வேண்டிய ஓர் இடம். ஏனெனில் இவ்வினைகளின் நிகழ்காலத்தில் வேறு ஒலியழுத்தக்குறிகளும் எதிர்காலத்தில் வேறு ஒலியழுத்தக்குறிகளும் வரும். *κρινω* என்பதின் எதிர்காலத்தில் ஒலியழுத்தக்குறிகள் பின்வருமாறு இருக்கும் :

*κρινῶ κρινεῖς κρινεῖ . . . κρινοῦσι(ν)*

இந்த நான்கு இடங்களில் *μενω, κρινω* என்பவற்றின் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் வேறுபடுத்திக் காட்டும்படி, இந்த நூலில் அவற்றின் எதிர்காலம் இந்த ஒலியழுத்தக்குறிகளோடே எழுதப்படும்.

பயிற்சி 12, பக். 101 காண்க.

## (ஊ) செய்வினை முதலாம் இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு (1st Aorist Indicative Active)

முன்னால் விளக்கப்பட்டதுபோல், இறந்த காலத் தொடர்ச்சி இறந்த காலத்தில் தொடர்ந்து செய்யப்பட்டு வந்த ஒரு செயலைக் குறிக்கிறது. தமிழில் அது "செய்துகொண்டிருந்தேன்" என மொழிபெயர்க்கப்படலாம். இறந்த காலத் தனிப்பு இறந்த காலத்தில் ஒரே சமயத்தில் செய்து முடிக்கப்பட்ட ஒரு செயலைக் குறிக்கிறது. தமிழில் அது சாதாரணமாக ஒரு இறந்த கால வினை முற்றினைக் கொண்டு மொழிபெயர்க்கப்படலாம், எ-கா. "செய்தேன்", அல்லது "செய்து விட்டேன்".

செய்வினை இறந்த காலத் தனிப்பு இரண்டு வேறுபட்ட முறைகளில் நிகழும். அவை முதலாம் இறந்த காலத் தனிப்பு என்றும் இரண்டாம் இறந்த காலத் தனிப்பு என்றும் குறிக்கப்படும். பொதுவாக முதலாம் இறந்த காலத் தனிப்பைக் கொண்டுள்ள வினைகளில் இரண்டாம் இறந்த காலத் தனிப்பும் இருக்காது.

**λυω** என்பதில் செய்வினை முதலாம் இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு பின்வருமாறு உருவெடுக்கும் :

(அ) பகுதிக்குமுன் ε எனும் இறந்த கால முன்னொட்டு

(ஆ) பகுதிக்குப்பின் σ எனும் இடைநிலை (எதிர்காலத்தில் வந்ததுபோல)

(இ) விகுதியில் α–எனும் உயிர்

| முன்னொட்டு | | பகுதி | | இடைநிலை | | விகுதி | | இ. காலத் தனிப்பு | பொருள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ἐ | + | λυ | + | σ | + | α | = | ἔλυσα | அவிழ்த்தேன் |
| ἐ | + | λυ | + | σ | + | ας | = | ἔλυσας | அவிழ்த்தாய் |
| ἐ | + | λυ | + | σ | + | ε(ν) | = | ἔλυσε(ν) | அவிழ்த்தான் (முதலியன) |
| ἐ | + | λυ | + | σ | + | αμεν | = | ἐλύσαμεν | அவிழ்த்தோம் |
| ἐ | + | λυ | + | σ | + | ατε | = | ἐλύσατε | அவிழ்த்தீர்கள் |
| ἐ | + | λυ | + | σ | + | αν | = | ἔλυσαν | அவிழ்த்தார்கள் |

மற்ற மூன்று வகையான வினைகளின் 1–ஆம் இறந்த காலத் தனிப்புக் கீழ்க்காணுமாறு உருவெடுக்கும் :

1. <u>பகுதி ஈற்றில் மெய் கொண்டவை</u> : எதிர்காலத்தில் σ எனும் இடைநிலை எவ்வாறு பகுதியுடன் புணர்ந்ததோ, அவ்வாறே இறந்த காலத் தனிப்பிலும் புணரும்.

எ–கா : ἐ + διωκ + σ + α = ἐδίωξα
ἐ + βλεπ + σ + α = ἔβλεψα
ἐ + σωζ + σ + α = ἔσωσα

2. குறுகிய வினைகள்: எதிர்காலத்தில் σ எனும் இடைநிலைக் குமுன் பகுதி ஈற்று ε எவ்வாறு நெடிலாயிற்றோ, அவ்வாறே இறந்த காலத் தனிப்பிலும் நெடிலாகும்.

எ—கா: ἐ + φιλη + σ + α = ἐφιλησα
ἐ + ποιη + σ + α = ἐποιησα

3. பகுதி ஈற்றில் λ, ν, ρ ஆகியவற்றில் ஒன்றைக் கொண்டவை: இவற்றின் இறந்த காலத் தனிப்புத் தனிப்பட்ட முறையில் உருவெடுக்கும்.

(அ) பகுதிக்குமுன் ἐ எனும் இறந்த கால முன்னொட்டு

(ஆ) பகுதியில் மாற்றம் (இது எதிர்காலத்தில் உண்டான மாற்றம் அன்று; இவ்வினைகளின் பகுதி எதிர்காலத்தில் ஒரு விதமாகவும், இறந்த காலத் தனிப்பில் வேறு விதமாகவும் மாறிவிடும்)

(இ) σ எனும் இடைநிலை வராது

(ஈ) α கொண்ட விகுதிகள்

| எ—கா: நிகழ்காலம் | எதிர்காலம் | I—ஆம் இ. காலத் தனிப்பு |
|---|---|---|
| στελλω | στελω | ἐστειλα |
| ἀγγελλω | ἀγγελω | ἠγγειλα |
| κρινω | κρινῶ | ἐκρινα |
| μενω | μενῶ | ἐμεινα |
| αἱρω | ἀρω | ἠρα |
| ἐγειρω[1] | ἐγερω | ἠγειρα |

[1] பயிற்சி 13, பக். 102 காண்க.

## (எ) செய்வினை இரண்டாம் இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு (2nd Aorist Indic. Active)

இரண்டாம் இறந்த காலத் தனிப்புப் பின்வருமாறு உருவெடுக்கும்:

(அ) பகுதிக்குமுன் ἐ எனும் இறந்த கால முன்னொட்டு

(ஆ) பகுதியில் மாற்றம் (இது எவ்வாறு உண்டாகும் என்பதற்கு விதி இல்லை; ஒவ்வொன்றும் ஒவ்வொரு முறையில் மாறிவிடும்)

(இ) இடைநிலை இல்லை

(ஈ) பகுதிக்குப்பின் இறந்த காலத் தொடர்ச்சி விகுதிகள்

*βαλλω* என்பதின் 2–ஆம் இறந்த காலத் தனிப்புக் கீழ்க்காணுமாறு உருவெடுக்கிறது :

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ἐ | + | βαλ | + | ον | = | ἐβαλον |
| ἐ | + | βαλ | + | ες | = | ἐβαλες |
| ἐ | + | βαλ | + | ε(ν) | = | ἐβαλε(ν) |
| ἐ | + | βαλ | + | ομεν | = | ἐβαλομεν |
| ἐ | + | βαλ | + | ετε | = | ἐβαλετε |
| ἐ | + | βαλ | + | ον | = | ἐβαλον |

குறிப்புக்கள் :

1. உருவெடுக்கும் முறையிலேயன்றி, முதலாம் இரண்டாம் இறந்த காலத் தனிப்புக்களுக்கிடையே பொருளில் வேறுபாடில்லை. ἐβαλον என்பது எறிந்தேன் எனப் பொருள்படும்.

2. ஒரு λ கெட்டதனால், βαλλ என்கிற வினைப் பகுதி βαλ என்பதாக மாறி இருக்கிறது. இதனால் இறந்த காலத் தொடர்ச்சியையும் 2–ஆம் இறந்த காலத் தனிப்பையும் வேறுபடுத்தி அறியலாம் (இறந்த காலத் தொடர்ச்சி–ἐβαλλον ; இறந்த காலத் தனிப்பு–ἐβαλον).

3. எந்த வினைகளில் 1–ஆம் இறந்த காலத் தனிப்பும் எந்த வினைகளில் 2–ஆம் இறந்த காலத் தனிப்பும் வரும் என்பதற்கு விதி இல்லை. அவற்றை ஒவ்வொன்றாகப் படித்தல் வேண்டும்.

கீழ்க்காணும் வினைகளின் 2–ஆம் இறந்த காலத் தனிப்புக்கள் கவனிக்கத் தக்கவை :

| நிகழ்காலம் | 2–ஆம் இ. காலத் தனிப்பு | பொருள் | |
|---|---|---|---|
| ἀγω | ἠγαγον | அழைத்துக் கொண்டுவருகிறேன் | |
| ἁμαρτανω | ἡμαρτον | பாவம் செய்கிறேன் | |
| εὑρισκω | εὑρον | கண்டு பிடிக்கிறேன் | |
| ἐχω | ἐσχον | உடையவனாயிருக்கிறேன் | |
| λαμβανω | ἐλαβον | பெற்றுக்கொள்ளுகிறேன் | |
| λεγω | εἰπον | சொல்லுகிறேன் | |
| λειπω | ἐλιπον | விட்டுவிடுகிறேன் | |
| πειθω | ἐπιθον | நம்பும்படி வைக்கிறேன் | |
| φερω | ἠνεγκον | தூக்கிக் கொண்டுவருகிறேன் | |
| ἐρχομαι | ἠλθον | வருகிறேன் | பக். 38 காண்க |
| ὁραω | εἰδον | பார்க்கிறேன் | பக். 73 காண்க |

*γινωσκω* (அறிந்துகொள்ளுகிறேன்), *βαινω* (போகிறேன்) என்பவற்றின் செய்வினை 2–ஆம் இறந்த காலத் தனிப்புத் தனிப்பட்ட முறையில் உருவெடுக்கும் :

| | | |
|---|---|---|
| நிகழ்காலம் — | *γινωσκω* | *βαινω* |
| 2–ஆம் இ. கா. தனிப்பு — | *ἐγνων* | *ἐβην* |
| | *ἐγνως* | *ἐβης* |
| | *ἐγνω* | *ἐβη* |
| | *ἐγνωμεν* | *ἐβημεν* |
| | *ἐγνωτε* | *ἐβητε* |
| | *ἐγνωσαν* | *ἐβησαν* |

---

பயிற்சி 14, பக். 103 காண்க.

## (ஏ) செய்வினை நிகழ்கால நிறைவுச் சாற்றுப் பாங்கு (Perfect Indic. Active)

இந்தக் காலம் இறப்பில் செய்த ஒரு செயலினால் உண்டான தற்போதுள்ள நிலையைக் குறிக்கிறது. அது தமிழில் "செய்திருக்கிறேன்" எனத் திருப்பப்படலாம். "செய்தேன்" என்பது நான் இறப்பில் செய்த செயலை உணர்த்துகிறது. "செய்திருக்கிறேன்" என்பது நான் அப்போது செய்த செயலினால் உண்டான நிலையை அல்லது விளைவை வலியுறுத்துகிறது.

நிகழ்கால நிறைவு பின்வருமாறு உருவெடுக்கும் :

(அ) பகுதி முதலில் நிற்கும் மெய் இரட்டிக்கும்

(ஆ) பகுதிக்கும் விகுதிக்கும் இடையே κ எனும் இடைநிலை வரும்

(இ) விகுதிகளில் பெரும்பாலமாக α உயிர் வரும்

*λυω* என்பதின் நிகழ்கால நிறைவைக் கீழே காண்க :

*(λε+λυ+κ+α)*

| | |
|---|---|
| *λελυκα* | *λελυκαμεν* |
| *λελυκας* | *λελυκατε* |
| *λελυκε(ν)* | *λελυκασι(ν)* |

குறிப்புக்கள் :

1. முதல் எழுத்து இரட்டித்தல் (reduplication) : பகுதி முதலில் உயிர் கொண்ட வினைகளில், முதல் எழுத்து இரட்டித்தலுக்குப் பதிலாக இறந்த கால முன்னொட்டு வரும்.

| | | |
|---|---|---|
| எ–கா : | *αἰτεω* | *ᾐτηκα* |
| | *ἀγγελλω* | *ἠγγελκα* |

பகுதி முதலில் χ φ θ ஆகிய மெய்களில் ஒன்றைக் கொண்ட வினைகளில், அம்மெய்க்குப் பதிலாக அவற்றிற்கு இனமான κ π τ ஆகியவற்றில் ஒன்று இரட்டிக்கப் பெறும்.

| | | |
|---|---|---|
| எ—கா : | φιλεω | πεφιληκα |
| | θεραπευω | τεθεραπευκα |

2. κ எனும் இடைநிலை : குறுகிய வினைகளில் பகுதி ஈற்று உயிர் இடைநிலைக்குமுன் நெடிலாகும்.

| | | |
|---|---|---|
| எ—கா : | αἰτεω | ᾐτηκα |
| | φιλεω | πεφιληκα |

3. 2—ஆம் நிகழ்கால நிறைவு : சில வினைகளில் κ எனும் இடைநிலை வராது. முதல் எழுத்து இரட்டித்தலும் α உயிரைக் கொண்ட விகுதியும் விதிப்படி பெறப்படும்.

எ—கா : γραφω γεγραφα

4. புறநடை : சில வினைகளின் நிகழ்கால நிறைவு விதி விலக்கான முறையில் உண்டாகும். கீழ்க்காண்பவை கவனிக்கத் தக்கவை ஆகும் :

| | | | |
|---|---|---|---|
| ἀκουω — | ἀκηκοα | λεγω — | εἴρηκα |
| ἐρχομαι — | ἐληλυθα | ὁραω — | ἑωρακα |
| λαμβανω — | εἰληφα | πειθω — | πεποιθα |

5. செய்வினை இறந்த கால நிறைவு (pluperfect active) : இது இறப்பில் செய்த ஒரு செயலினால் உண்டான முற்பட்ட ஒரு நிலையைக் குறிக்கிறது. தமிழில் "செய்திருந்தேன்" என மொழிபெயர்க்கப் படலாம். இதில் முதல் எழுத்து இரட்டித்தலும் κ எனும் இடைநிலையும் வரும். ஆனால் α கொண்ட விகுதிக்குப் பதிலாக ει எனும் இணையுயிரைக் கொண்ட விகுதி வரும். இறந்த கால முன்னொட்டுப் பெறப்படும் (சில சமயம் விடப்படும்).

ἐλελυκειν
ἐλελυκεις
ἐλελυκει
ἐλελυκειμεν
ἐλελυκειτε
ἐλελυκεισαν

பயிற்சி 15, 16, பக். 104, 105 காண்க.

## (ஐ) செயப்பாட்டு வினை (Passive Voice)

அடிக்கிறேன் என்பது செய்வினை, அடிக்கப்படுகிறேன் என்பது செயப்பாட்டு வினை. எத்தனை காலங்கள் செய்வினையில் வருகின்றனவோ, அத்தனையும் செயப்பாட்டு வினையிலும் வருகின்றன. ஆயின் செய்வினையில் வருகின்ற விகுதிகள் வேறு, செயப்பாட்டு வினையில் வருகின்ற விகுதிகள் வேறு.

1. <u>செயப்பாட்டு வினை நிகழ்காலச் சாற்றுப் பாங்கு</u> :

| | | | |
|---|---|---|---|
| λυ | ομαι | = | அவிழ்க்கப்படுகிறேன் |
| λυ | η | = | அவிழ்க்கப்படுகிறாய் |
| λυ | εται | = | அவிழ்க்கப்படுகிறான் (முதலியன) |
| λυ | ομεθα | = | அவிழ்க்கப்படுகிறோம் |
| λυ | εσθε | = | அவிழ்க்கப்படுகிறீர்கள் |
| λυ | ονται | = | அவிழ்க்கப்படுகிறார்கள் |

λυομαι என்பது "அவிழ்க்கப்பட்டுக்கொண்டிருக்கிறேன்" என்றும் மொழிபெயர்க்கப்படலாம். φιλεω போன்ற குறுகிய வினைகள் முன் சொன்ன புணர்ச்சி விதிகளின்படி இதே விகுதிகளைப் பெறும் (பக். 26 காண்க).

| | | | | |
|---|---|---|---|---|
| φιλε | + | ομαι | = | φιλουμαι |
| φιλε | + | η | = | φιλῃ |
| φιλε | + | εται | = | φιλειται |
| φιλε | + | ομεθα | = | φιλουμεθα |
| φιλε | + | εσθε | = | φιλεισθε |
| φιλε | + | ονται | = | φιλουνται |

2. <u>செயப்பாட்டு வினை இறந்த காலத் தொடர்ச்சிச் சாற்றுப் பாங்கு</u> :

| | | | | |
|---|---|---|---|---|
| ἐ | λυ | ομην | = | அவிழ்க்கப்பட்டுக்கொண்டிருந்தேன் |
| ἐ | λυ | ου | = | அவிழ்க்கப்பட்டுக்கொண்டிருந்தாய் |
| ἐ | λυ | ετο | = | அவிழ்க்கப்பட்டுக்கொண்டிருந்தான் (முதலியன) |
| ἐ | λυ | ομεθα | = | அவிழ்க்கப்பட்டுக்கொண்டிருந்தோம் |
| ἐ | λυ | εσθε | = | அவிழ்க்கப்பட்டுக்கொண்டிருந்தீர்கள் |
| ἐ | λυ | οντο | = | அவிழ்க்கப்பட்டுக்கொண்டிருந்தார்கள் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ἐ | + | φιλε | + | ομην | = | ἐφιλουμην |
| ἐ | + | φιλε | + | ου | = | ἐφιλου |
| ἐ | + | φιλε | + | ετο | = | ἐφιλειτο |
| ἐ | + | φιλε | + | ομεθα | = | ἐφιλουμεθα |
| ἐ | + | φιλε | + | εσθε | = | ἐφιλεισθε |
| ἐ | + | φιλε | + | οντο | = | ἐφιλουντο |

3. <u>செயப்பாட்டு வினை முதலாம் இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு</u>: இது பின்வருமாறு உருவெடுக்கும்:

| | |
|---|---|
| (அ) இறந்த கால முன்னொட்டு | ἐ |
| (ஆ) வினைப் பகுதி | ἐ + λυ |
| (இ) θ எனும் இடைநிலை | ἐ + λυ + θ |
| (ஈ) η உயிரைக் கொண்ட விகுதி | ἐ + λυ + θ + ην |

இதில் வரும் விகுதிகள் βαινω என்பதின் செய்வினை இறந்த காலத் தனிப்பில் வந்தவையே (பக். 32 காண்க).

| | |
|---|---|
| ἐλυθην | அவிழ்க்கப்பட்டேன் |
| ἐλυθης | அவிழ்க்கப்பட்டாய் |
| ἐλυθη | அவிழ்க்கப்பட்டான் |
| ελυθημεν | அவிழ்க்கப்பட்டோம் |
| ἐλυθητε | அவிழ்க்கப்பட்டீர்கள் |
| ἐλυθησαν | அவிழ்க்கப்பட்டார்கள் |

குறுகிய வினைகளில், θ எனும் இடைநிலைக்குமுன் பகுதி ஈற்று ε நெடில் ஆகிறது.

| | | |
|---|---|---|
| எ—கா: | φιλεω | ἐφιληθην |
| | ποιεω | ἐποιηθην |

பகுதி ஈற்றில் மெய் கொண்ட வினைகளில், θ எனும் இடைநிலைக்குமுன் பகுதி ஈற்று மெய் கீழ்க்காணுமாறு திரியும்:

| பகுதி ஈற்று மெய் | | திரிபு | எ—கா: | | |
|---|---|---|---|---|---|
| σσ, κ, γ, χ | → | χ | ἐ+διωκ+θ+ην | = | ἐδιωχθην |
| π, β, πτ | → | φ | ἐ+πεμπ+θ+ην | = | ἐπεμφθην |
| θ, ζ | → | σ | ἐ+καθαριζ+θ+ην | = | ἐκαθαρισθην |

பல வினைகளின் செயப்பாட்டு வினை முதலாம் இறந்த காலத் தனிப்பு இந்த விதிகளுக்கு மாறாக உருவெடுக்கும், ஆதலால் ஒவ்வொன்றையும் வினைகளின் முக்கிய கால மாற்றங்களின் அட்டவணையில் படித்தல் வேண்டும் (பக். 141–147 காண்க).

4. <u>செயப்பாட்டு வினை இரண்டாம் இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு</u>: செயப்பாட்டு வினையிலும் சில வினைகள் 2–ஆம் இறந்த காலத் தனிப்பைக் கொண்டுள்ளன (பக். 30 காண்க). செய்வினையில் 2–ஆம் இறந்த காலத் தனிப்பைக் கொண்டவை எல்லாம் செயப்பாட்டு வினையிலும் 2–ஆம் இறந்த காலத் தனிப்பைப் பெறும் என்பதற்கு இல்லை. சில

வினைகள் 2–ஆம் இறந்த காலத் தனிப்பைச் செய்வினையிலும், வேறு சில செயப்பாட்டு வினையிலும் பெறும். அது உருவெடுக்கும் முறையாவது :

(அ) ἐ எனும் முன்னொட்டு முதலில் வரும்

(ஆ) பகுதியில் மாறுதல் உண்டாகும்

(இ) இடைநிலையின்றி, η கொண்ட விகுதி வரிசை

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| எ–கா : | στελλω : | ἐ | + | σταλ | + | ην | = | ἐσταλην |
| | ἀγγελλω : | ἐ | + | ἀγγελ | + | ην | = | ἠγγελην |
| | γραφω : | ἐ | + | γραφ | + | ην | = | ἐγραφην |

5. செயப்பாட்டு வினை எதிர்காலச் சாற்றுப் பாங்கு : இது பின்வருமாறு உருவெடுக்கும் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (அ) வினைப் பகுதி | λυ | | | | |
| (ஆ) θησ எனும் இடைநிலை | λυ | + | θησ | | |
| (இ) செயப்பாட்டு வினை நிகழ்கால விகுதிகள் | λυ | + | θησ | + | ομαι |

| | |
|---|---|
| λυθησομαι | λυθησομεθα |
| λυθηση | λυθησεσθε |
| λυθησεται | λυθησονται |

**λυθησομαι** என்பதின் பொருள் "அவிழ்க்கப்படுவேன்" என்பதே. குறுகிய வினைகளிலும் பகுதி ஈற்றில் மெய் கொண்ட வினைகளிலும், செயப்பாட்டு வினை 1–ஆம் இறந்த காலத் தனிப்பில் θ எனும் இடைநிலைக்குமுன் என்னென்ன மாற்றங்கள் பகுதி ஈற்றில் உண்டாயினவோ, அதே மாற்றங்கள் செயப்பாட்டு வினை எதிர்காலத்தில் **θησ** எனும் இடைநிலைக்குமுன் உண்டாகும்.

| | | | |
|---|---|---|---|
| எ–கா : | φιλεω | ἐφιλ<u>η</u>θην | φιλ<u>η</u>θησομαι |
| | διωκω | ἐδιω<u>χ</u>θην | διω<u>χ</u>θησομαι |
| | πεμπω | ἐπεμ<u>φ</u>θην | πεμ<u>φ</u>θησομαι |
| | καθαριζω | ἐκαθαρι<u>σ</u>θην | καθαρι<u>σ</u>θησομαι |

2–ஆம் எதிர்காலம் : செயப்பாட்டு வினையில் எந்த வினைகள் 2–ஆம் இறந்த காலத் தனிப்பைப் பெற்றனவோ, அதே வினைகள் 2–ஆம் எதிர் காலத்தையும் பெறும். அது 2–ஆம் இறந்த காலத் தனிப்பின் அடிப்படையில் உருவெடுக்கும்.

| | | | |
|---|---|---|---|
| எ–கா : | στελλω | ἐσταλην | σταλησομαι |
| | ἀγγελλω | ἠγγελην | ἀγγελησομαι |
| | γραφω | ἐγραφην | γραφησομαι |

6. <u>செயப்பாட்டு வினை நிகழ்கால நிறைவு, இறந்த கால நிறைவு</u>: இவற்றில் முதல் எழுத்து இரட்டித்தலும் செயப்பாட்டுவினை நிகழ்கால விகுதிகளையும் இறந்த காலத் தொடர்ச்சி விகுதிகளையும் போன்ற விகுதிகளும் வந்ததைக் காண்க:

| நிகழ்கால நிறைவு | இறந்த கால நிறைவு |
|---|---|
| λελυμαι | ἐλελυμην |
| λελυσαι | ἐλελυσο |
| λελυται | ἐλελυτο |
| λελυμεθα | ἐλελυμεθα |
| λελυσθε | ἐλελυσθε |
| λελυνται | ἐλελυντο |
| (= அவிழ்க்கப்பட்டிருக்கிறேன், முதலியன) | (= அவிழ்க்கப்பட்டிருந்தேன், முதலியன) |

7. <u>கருத்தாவும் கருவியும்</u>: கருத்தா என்பது ஒரு செயலை நடப்பிக்கின்ற உயிரையும், கருவி என்பது கருத்தா அந்தச் செயலை நடப்பிக்கப் பயன்படுத்துகின்ற பொருளையும் குறிக்கும். கீழ்க்காணும் இரண்டு தமிழ் வாக்கியங்களிலும் கிறிஸ்து என்பதே கருத்தா:

கிறிஸ்து மனிதரை ஒரு வார்த்தையைக் கொண்டு இரட்சிக்கிறார்;

மனிதர் கிறிஸ்துவினால் ஒரு வார்த்தையைக் கொண்டு இரட்சிக்கப்படுகிறார்கள்.

இந்த வாக்கியங்களில் வார்த்தை என்பது கருவி.

(அ) கருவிப் பொருளை உணர்த்த, கொடைப் பொருள் வேற்றுமை பயன்படுத்தப்படும் *

எ–கா: ὁ Χριστος τους ἀνθρωπους <u>λογῳ</u> σωζει

οἱ ανθρωποι . . . <u>λογῳ</u> σωζονται

(ஆ) ஒரு செயப்பாட்டு வினைச்சொல்லோடு கருத்தாப் பொருளை உணர்த்த, ὑπο எனும் முன்னிடைச்சொல்லும் உடைமைப் பொருள் வேற்றுமையும் பயன்படுத்தப்படும்

எ–கா: οἱ ἀνθρωποι <u>ὑπο του Χριστου</u> σωζονται λογῳ

---

* பயிற்சி 17, 18, பக். 105, 106 காண்க.

## (ஒ) தற்பொருட்டு வினை (Middle Voice)

தமிழில் செய்வினை செயப்பாட்டு வினை ஆகிய இரண்டு வினைநிலைகள் மட்டும் உண்டு. கிரேக்கத்தில் அவ்விரண்டோடு தற்பொருட்டு வினை

எனப்படும் மூன்றாவது வினைநிலையும் உண்டு. அது பொதுவாக ஒருவன் தனக்காகச் செய்கின்ற ஒரு காரியத்தைக் குறிக்கும். அது சில வினைகளில் மட்டும் வரும்.

எ—கா :

| | | | |
|---|---|---|---|
| **καλεω** | = | கூப்பிடுகிறேன் | (செய்வினை) |
| **προσκαλεομαι** | = | என்னிடம் வர அழைக்கிறேன் (அல்லது கூப்பிட்டுக்கொள்கிறேன்) | (தற். வினை) |
| **αἰτεω** | = | வேண்டிக்கொள்ளுகிறேன் | (செய்வினை) |
| **αιτεομαι** | = | வேண்டிக்கொள்ளுகிறேன் | (தற். வினை) |
| **πειθω** | = | நம்பும்படி வைக்கிறேன் | (செய்வினை) |
| **πειθομαι** | = | கீழ்ப்படிகிறேன் | (தற். வினை) |

சில சமயம் செய்வினையின் பொருளுக்கும் தற்பொருட்டு வினையின் பொருளுக்கும் இடையே அதிக வேறுபாடு இருக்காது (எ—கா : **αἰτεω, αἰτεομαι**). வேறு சில சமயம் இவ்விரண்டுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இல்லாமல் இருக்கலாம். தமிழில் தற்பொருட்டு வினையின் பொருள் ஓர் அளவுக்குக் கொள்ளுதல் என்கிற துணைவினை ஒரு வினைச் சொல்லோடு சேர்ந்து வருவதால் உணர்த்தப் படுகிறது எனலாம் (எ—கா : வைக்கிறேன், வைத்துக்கொள்ளுகிறேன்).

<u>செய்வினையுரு குன்றிய வினைகள்</u> (**deponent verbs**) : இந்த வினைகள் ஒரு போதும் செய்வினை உருவத்தில் வராமல் எப்போதும் தற்பொருட்டு (அல்லது செயப்பாட்டு) வினை உருவத்தில் வரும். எனினும் அவற்றின் பொருள் செய்வினைப் பொருள்தான்.

| | | | |
|---|---|---|---|
| எ—கா : | **ἀποκρινομαι** | = | பதில் சொல்லுகிறேன் |
| | **ἀρχομαι** | = | தொடங்குகிறேன் |
| | **γινομαι** | = | ஆகிறேன், நடைபெறுகிறேன் (படர்க்கையில்) |
| | **ἐρχομαι** | = | வருகிறேன் |
| | **πορευομαι** | = | போகிறேன் |
| | **προσευχομαι** | = | ஜெபிக்கிறேன் |

இவற்றில் **πορευομαι** என்பதின் எதிர்காலமும் இறந்த காலத் தனிப்பும் செயப்பாட்டு உருவத்தைப் பெறும் (**πορευθησομαι, ἐπορευθην**) ; **ἀποκρινομαι** என்பதில் தற்பொருட்டு வினை இறந்த காலத் தனிப்பும் செயப்பாட்டு வினை இறந்த காலத் தனிப்பும் பொருள் வேறுபாடின்றி வரும் (**ἀπεκριναμην, ἀπεκριθην**) ; **ἐρχομαι** என்பதன் எல்லாக் காலங்களும் விதிக்கு மாறாக உருவாகும். மற்றச் செய்வினையுரு குன்றிய வினைகளின் இறந்த காலத் தனிப்பு தற்பொருட்டு வினை உருவத்தில் அமையும் (கீழே காண்க).

1. தற்பொருட்டு வினை நிகழ்காலமும் இறந்த காலத் தொடர்ச்சியும்: இவையும், செயப்பாட்டு வினை நிகழ்காலமும் இறந்த காலத் தொடர்ச்சியும் ஒன்று தான்:

| நிகழ்காலம் | இறந்த காலத் தொடர்ச்சி |
|---|---|
| λυομαι | ἐλυομην |
| λυῃ | ἐλυου |
| λυεται | ἐλυετο |
| λυομεθα | ἐλυομεθα |
| λυεσθε | ἐλυεσθε |
| λυονται | ἐλυοντο |

2. தற்பொருட்டு வினை எதிர்காலச் சாற்றுப் பாங்கு: செய்வினையில் எதிர்காலம் எப்படி உண்டாயிற்றோ, அப்படியே தற்பொருட்டு வினையிலும் உண்டாகும். அதாவது, வினைப் பகுதிக்கும் நிகழ்கால விகுதிகளுக்கும் இடையே σ எனும் இடைநிலை பொருந்தி நிற்கும்.

தற்பொருட்டு வினை

| நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|
| λυομαι | λυσομαι |
| λυῃ | λυσῃ |
| λυεται | λυσεται |
| λυομεθα | λυσομεθα |
| λυεσθε | λυσεσθε |
| λυονται | λυσονται |

சில வினைகளின் செய்வினை எதிர்காலம் இதனைப் போன்ற தற்பொருட்டு வினை உருவத்தில் வரும்.

செய்வினை

| எ–கா: நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|
| ἀκουω | ἀκουσομαι (அல்லது ἀκουσω) |
| γινωσκω | γνωσομαι |
| λαμβανω | λημψομαι |

3. தற்பொருட்டு வினை 1–ஆம் இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு: இதுவும் செய்வினை 1–ஆம் இறந்த காலத் தனிப்பு உருவெடுத்தது போல உருவெடுக்கும். அதாவது, ϵ எனும் முன்னொட்டும் σ எனும் இடைநிலையும் α உயிரைக் கொண்ட விகுதிகளும் இதிலே வரும்.

| | |
|---|---|
| ἐλυσαμην | ἐλυσαμεθα |
| ἐλυσω | ἐλυσασθε |
| ἐλυσατο | ἐλυσαντο |

ἀρχομαι — ἠρξαμην
προσευχομαι — προσηυξαμην

4. <u>தற்பொருட்டு வினை 2–ஆம் இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு</u>: செய்வினையில் வந்தது போல, இதிலும் ἐ எனும் முன்னொட்டு, பகுதியின் மாற்றம், இறந்த காலத் தொடர்ச்சி விகுதிகள் ஆகிய கூறுபாடுகள் வரும். செய்வினையில் எந்த வினைகளின் இறந்த காலத் தனிப்பு 2–ஆம் உருவத்தில் உண்டாயிற்றோ, அந்த வினைகள் தற்பொருட்டு வினையிலும் 2–ஆம் இறந்த காலத் தனிப்பைப் பெறும். γινομαι எனும் செய்வினையுரு குன்றிய வினையிலும் தற்பொருட்டு வினை 2–ஆம் இறந்த காலத் தனிப்பு வரும்.

| | |
|---|---|
| ἐγενομην | ἐγενομεθα |
| ἐγενου | ἐγενεσθε |
| ἐγενετο | ἐγενοντο |

γιν எனும் இவ் வினையின் பகுதி இங்கு γεν எண்பதாக மாறியிருக்கிறது எனக் காண்க.

| நிகழ்காலம் | செய்வினை 2–ஆம் இ. காலத் தனிப்பு | தற். வினை 2–ஆம் இ. காலத் தனிப்பு |
|---|---|---|
| λαμβανω | ἐλαβον | ἐλαβομην |
| βαλλω | ἐβαλον | ἐβαλομην |

5. <u>தற்பொருட்டு வினை நிகழ்கால நிறைவு, இறந்த கால நிறைவு</u>: இவையும் செயப்பாட்டு வினை நிகழ்கால நிறைவும் இறந்த கால நிறைவும் ஒன்று தான் (பக். 37 காண்க).

நாம் இப்பொழுது ஒரு வினையின் எல்லாக் காலங்களுக்கும் உரிய சாற்றுப் பாங்குகளைப் படித்துள்ளோம். அவற்றைக் கீழ்க்காணுமாறு தொகுத்துக் காண்பிக்கலாம்:

| | செய்வினை | தற். வினை | செயப்பாட்டு வினை |
|---|---|---|---|
| நிகழ்காலம் | λυω | ... λυομαι | ... |
| இ. காலத் தொடர்ச்சி | ἐλυον | ... ἐλυομην | ... |
| எதிர்காலம் | λυσω | λυσομαι | λυθησομαι |
| இ. காலத் தனிப்பு 1–ஆம் | ἐλυσα | ἐλυσαμην | ἐλυθην |
| இ. காலத் தனிப்பு 2–ஆம் | ἐβαλον | ἐγενομην | ἐσταλην |
| நி. கால நிறைவு | λελυκα | ... λελυμαι | ... |
| இ. கால நிறைவு | ἐλελυκειν | ... ἐλελυμην | ... |

இவற்றை நன்றாகப் படிப்பது மிகவும் அவசியம். ஏனெனில் ஏனைய பல வினைகளில் அந்தந்தக் காலம் இதற்கு மாறாக உருவாகும் ஆயினும், இதே விகுதி வரிசைகள் எல்லாவற்றிலேயும் வரும். விதிக்கு மாறாகக் காலங்கள் உருவாகும் வினைகளின் பட்டியலை 141–147 ஆம் பக்கத்தில் காண்க. அவை யாவும் அடிக்கடி வரக் கூடிய சொற்கள் ஆதலால், அப்பட்டியலையும் படிப்பது நல்லது.

---

பயிற்சி 19, பக். 106 காண்க.

# அதிகாரம் 4

## பெயரியல் (ii)

### (அ) மூன்றும் இனப் பெயர்கள்

இவை பகுதி ஈற்றில் மெய் கொண்டவை என்றும் பகுதி ஈற்றில் உயிர் கொண்டவை என்றும் இருவகைப்படும்.

1. பகுதி ஈற்றில் மெய் கொண்டவை — ஆண்பால், பெண்பால்: இவை பெறும் வேற்றுமை உருபுகளாவன :

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| எழுவாய் வேற். | (வெவ்வேறு) | ες |
| விளி வேற். | (வெவ்வேறு) | ες |
| செயப். வேற். | α | ας |
| உடைமைப். வேற். | ος | ων |
| கொடைப். வேற். | ι | σι(ν) |

இப் பெயர்களின் முதல்நிலை (அதாவது, எழுவாய் வேற். ஒருமை) ஒரே உருவத்தில் இருக்காது. அவை எல்லாவற்றிலும் ஒரே வகை யான எழுவாய் வேற். ஒருமை உருபு இல்லை (எ–கா: **ἐλπις, χειρ, σαρξ, αἰων** முதலியன). அந்த வெவ்வேறான முதல்நிலைகள் மேற்கண்ட உருபுகளைப் பெறுமுன், அம்முதல்நிலைகள் திரியும் (எ–கா: **ἐλπις → ἐλπιδ + α, ος** முதலியன ; **σαρξ → σαρκ + α, ος** முதலியன). அந்தத் திரிபு எவ்வாறாகும் என்பதற்குப் பொது விதி இல்லை. ஒவ்வொரு முதல்நிலையும் ஒவ்வொரு முறையில் திரியும். ஆகவே இந்தப் பெயர்களை ஒவ்வொன்றாகப் படித்தல் வேண்டும்.

| எ–கா : | ἡ σαρξ (=மாமிசம்) | ἡ ἐλπις (=நன்னம்பிக்கை) | ὁ αἰων (=யுகம்) | ὁ σωτηρ (=இரட்சகர்) | ὁ πατηρ (=தந்தை) |
|---|---|---|---|---|---|
| ஒருமை | | | | | |
| எழுவாய் வேற். | σαρξ | ἐλπις | αἰων | σωτηρ | πατηρ |
| விளி வேற். | σαρξ | ἐλπι | αἰων | σωτερ | πατερ |
| செயப். வேற். | σαρκα | ἐλπιδα | αἰωνα | σωτηρα | πατερα |
| உடைமைப். வேற். | σαρκος | ἐλπιδος | αἰωνος | σωτηρος | πατρος |
| கொடைப். வேற். | σαρκι | ἐλπιδι | αἰωνι | σωτηρι | πατρι |
| பன்மை | | | | | |
| எழுவாய் வேற். | σαρκες | ἐλπιδες | αἰωνες | σωτηρες | πατερες |
| விளி வேற். | σαρκες | ἐλπιδες | αἰωνες | σωτηρες | πατερες |
| செயப். வேற். | σαρκας | ἐλπιδας | αἰωνας | σωτηρας | πατερας |
| உடைமைப். வேற். | σαρκων | ἐλπιδων | αἰωνων | σωτηρων | πατερων |
| கொடைப். வேற். | σαρξι(ν) | ἐλπισι(ν) | αἰωσι(ν) | σωτηρσι(ν) | πατρασι(ν) |

குறிப்புக்கள் :

(அ) இவற்றில் πατηρ என்பது விதிக்கு விலக்கு. அதன் பகுதி πατερ என்பதாகவும் πατρ என்பதாகவும் திரிந்து உருபு பெறும். மேலும் கொடைப்பொருள் வேற். பன்மையில் ασι(ν) எனும் உருபு வந்தது. ἡ μητηρ (= தாய்) ἡ θυγατηρ (= மகள்) ஆகிய பெயர்களும் இதனைப் போல உருபேற்கும்.

(ஆ) இவற்றின் கொடைப்பொருள் வேற். பன்மை கவனிக்கத் தக்கது. அதில் σι எனும் உருபு பகுதி ஈற்று மெய்யோடு சேரும்போது, வெவ்வேறான முறைகளில் புணர்ச்சி நிகழும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| எ–கா : | σαρκ | + | σι | = | σαρξι | (κ திரிந்தது) |
| | ἐλπιδ | + | σι | = | ἐλπισι | (δ கெட்டது) |
| | αἰων | + | σι | = | αἰωσι | (ν கெட்டது) |
| | σωτηρ | + | σι | = | σωτηρσι | (இயல்பு) |

(இ) இந்தப் பெயர்களைப் படிக்கும்போது, அவற்றின் முதல் நிலை, உடைமைப். வேற். ஒருமை, பால், பொருள் இந்த நான்கு கூறுபாடுகளையும் மனதில் வைத்துக் கொண்டால் போதும். அந்த நான்கு கூறுபாடுகளைக் கொண்டு இந்தப் பெயர்களைக் குறிப்பிடுவது வழக்கம்.

எ–கா : σαρξ, σαρκος, பெண்பால், மாமிசம்
αἰων, αἰωνος, ஆண்பால், யுகம்

மாணவர் மூன்றும் இன உருபுகளைப் படித்திருப்பின், எந்தத் தனிப் பெயரையும் குறித்து அறிய வேண்டிய வேறு எல்லாக் காரியங்களும் இந்த நான்கு கூறுபாடுகளில் அடங்கி இருக்கும்.

2. பகுதி ஈற்றில் மெய் கொண்டவை — அலிப்பால் :

இவை பெரும்பாலும் எழுவாய் வேற். ஒருமையில் μα எனும் உருபு பெற்று மற்ற உருபுகளைப் பின்வருமாறு ஏற்கும் :

το ὀνομα = பெயர்

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| எழுவாய் வேற். | ὀνομα | ὀνοματα |
| விளி வேற். | ὀνομα | ὀνοματα |
| செயப். வேற். | ὀνομα | ὀνοματα |
| உடைமைப். வேற். | ὀνοματος | ὀνοματων |
| கொடைப். வேற். | ὀνοματι | ὀνομασι(ν) |

எழுவாய் வேற். ஒறுமையில் μα எனும் உருபு பெற்ற எல்லா மூன்றும் இன அலிப்பால் பெயர்களும் இதே முறையில் உருபேற்கும். μα எனும் உருபு பெறாத வேறு சில அலிப்பால் பெயர்களும் இந்த வகையைச் சேர்ந்தவையே.

| | | | | |
|---|---|---|---|---|
| எ–கா : | φως | φωτος, | அலிப்பால், | ஒளி |
| | ὑδωρ | ὑδατος, | அலிப்பால், | தண்ணீர் |

3. பகுதி ஈற்றில் உயிர் கொண்டவை—ஆண்பால் :

பகுதி ஈற்றில் உயிர் கொண்ட மூன்றும் இனப் பெயர்களிலும் பொதுவாக மேற்கண்ட அதே உருபுகள் வரும். ஆயினும் அந்த உருபுகள் பகுதி ஈற்று உயிரோடு சேரும்போது, விகாரப் புணர்ச்சி உண்டாகும். ஒரு சில இடங்களில் மட்டும் இவை பெறும் உருபுகள் மேற்கண்டவற்றைவிட வேறுபட்டிருக்கும். பகுதி ஈற்றில் உயிர் கொண்ட ஆண்பால் பெயர்கள் இருவகைப்படும் :

| | βασιλευς | ἰχθυς |
|---|---|---|
| ஒருமை | (= அரசன்) | (= மீன்) |
| எழுவாய் வேற். | βασιλευς | ἰχθυς |
| விளி வேற். | βασιλευ | ἰχθυ |
| செயப். வேற். | βασιλεα | ἰχθυν |
| உடைமைப். வேற். | βασιλεως | ἰχθυος |
| கொடைப். வேற். | βασιλει | ἰχθυι |
| பன்மை | | |
| எழுவாய் வேற். | βασιλεις | ἰχθυες |
| விளி வேற். | βασιλεις | ἰχθυες |
| செயப். வேற். | βασιλεις | ἰχθυας |
| உடைமைப். வேற். | βασιλεων | ἰχθυων |
| கொடைப். வேற். | βασιλευσι(ν) | ἰχθυσι(ν) |

இந்த இரண்டு வகைகளில் ἰχθυς போன்ற பெயர்கள் வெகு சில.

4. பகுதி ஈற்றில் உயிர் கொண்டவை — பெண்பால் :

πολις (= நகரம்)

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| எழுவாய் வேற். | πολις | πολεις |
| விளி வேற். | πολι | πολεις |
| செயப். வேற். | πολιν | πολεις |
| உடைமைப். வேற். | πολεως | πολεων |
| கொடைப். வேற். | πολει | πολεσι(ν) |

σις என்று முடியும் தொழிற்பெயர்கள் பல இந்த வகையைச் சேர்ந் தவை ஆகும் (எ-கா. κρισις, κρισεως, பெண்பால், நியாயத்தீர்ப்பு).

5. பகுதி ஈற்றில் உயிர் கொண்டவை — அலிப்பால் :

γενος = இனம்

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| எழுவாய் வேற். | γενος | γενη |
| விளி வேற். | γενος | γενη |
| செயப். வேற். | γενος | γενη |
| உடைமைப். வேற். | γενους | γενεων (அல்லது γενων) |
| கொடைப். வேற். | γενει | γενεσι(ν) |

இதன் முதல்நிலையைப் பார்க்கும்போது, இது λογος என்கிற வகையைச் சேர்ந்ததாயிருக்கும் எனத் தெரிகிறது. ஆயினும் இது வேறு, அது வேறு. இந்த இரண்டு வகைகளை வேறு படுத்திப் படித்தல் வேண்டும்.

---

பயிற்சி 20, பக். 107 காண்க.

## (ஆ) மூன்றும் இனப் பெயரடைகள்

மூன்றும் இனப் பெயர்களைப் போல, மூன்றும் இனப் பெயரடை களும் இருவகைப்படும்.

1. பகுதி ஈற்றில் மெய் கொண்டவை :

இவற்றில் பெண்பாலுக்குத் தனி உருபுகள் இல்லை. ஆண்பால் பெண்பாலுக்கும் பயன்படுத்தப்படும். 3–ஆம் இனப் பெயர்களைப் போல் இவற்றின் முதல்நிலை திரிந்து உருபேற்கும். எ–கா : μειζων (=பெரிய, பக். 54 காண்க).

| | ஒருமை | | பன்மை | |
|---|---|---|---|---|
| | ஆண், பெண்பால் | அலிப்பால் | ஆண், பெண்பால் | அலிப்பால் |
| எழுவாய் வேற். | μειζων | μειζον | μειζονες | μειζονα |
| விளி வேற். | μειζον | μειζον | μειζονες | μειζονα |
| செயப். வேற். | μειζονα | μειζον | μειζονας | μειζονα |
| உடைமைப். வேற். | . . . μειζονος . . . | | . . . μειζονων . . . | |
| கொடைப். வேற். | . . . μειζονι . . . | | . . . μειζοσι(ν) . . . | |

ων எனும் உருபு கொண்ட உறழ்தரப் பெயரடைகள் இதனைப்போல் உருபேற்கும் (பக். 54 காண்க).

2. பகுதி ஈற்றில் உயிர் கொண்டவை :

இவையும் ஆண் பெண்பொதுப் (two termination) பெயரடைகளாகும். இவற்றின் ஆண்பெண்பால் ஓரளவு βασιλευς என்பதற்கும். இவற்றின் அலிப்பால் ஓரளவு γενος என்பதற்கும் ஒப்பாயிருக்கின்றன, எ–கா : ἀληθης (= உண்மையான).

| | ஒருமை | | பன்மை | |
|---|---|---|---|---|
| | ஆண், பெண்பால் | அலிப்பால் | ஆண், பெண்பால் | அலிப்பால் |
| எழுவாய் வேற். | ἀληθης | ἀληθες | ἀληθεις | ἀληθη |
| விளி வேற். | ἀληθες | ἀληθες | ἀληθεις | ἀληθη |
| செயப். வேற். | ἀληθη | ἀληθες | ἀληθεις | ἀληθη |
| உடைமைப். வேற். | ... ἀληθους ... | | ... ἀληθων ... | |
| கொடைப். வேற். | ... ἀληθει ... | | ... ἀληθεσι(ν) ... | |

## (இ) கலப்பு இனப் பெயரடைகள் (Mixed Declension Adjectives)

சில பெயரடைகள் ஆண்பாலிலும் அலிப்பாலிலும் 3–ஆம் இன உருபுகளையும், பெண்பாலில் 1–ஆம் இன உருபுகளையும் ஏற்கும். வினைச் சொற்களிலிருந்து பிறக்கும் பெயரெச்சங்கள் இந்த வகையைச் சேர்ந்தவை ஆகும் (பக். 64–68 காண்க). மேலும் கீழ்க்காணும் இரண்டு சொற்கள் கவனிக்கத் தக்கவை.

1. πας, πασα, παν = எல்லா

| | ஒருமை | | | பன்மை | | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண். | பெண். | அலிப். | ஆண். | பெண். | அலிப். |
| எழுவாய் வேற். | πας | πασα | παν | παντες | πασαι | παντα |
| விளி வேற். | πας | πασα | παν | παντες | πασαι | παντα |
| செயப். வேற். | παντα | πασαν | παν | παντας | πασας | παντα |
| உடை. வேற். | παντος | πασης | παντος | παντων | πασων | παντων |
| கொடை. வேற். | παντι | παση | παντι | πασι(ν) | πασαις | πασι(ν) |

இது ஆண்பாலிலும் அலிப்பாலிலும் παντ எனும் பகுதியின்மேல் 3–ஆம் இன உருபுகளை ஏற்கிறது ; பெண்பாலில் πασ எனும் பகுதியின்

மேல் δοξα என்பதின் உருபுகளை ஏற்கிறது. இப்பெயரடை பின்வரும் முறைகளில் வழங்கப்பெறும் :

(அ) παντα δι' αὐτου ἐγενετο (யோ. 1[3])
எல்லாம் அவர் மூலம் உண்டாயின
παντες ἠλθον = எல்லாரும் வந்தனர்
(இங்கே πας தனியாக நின்று "எல்லாம்" "எல்லாரும்" எனப் பொருள்படுகிறது)

(ஆ) παντες οἱ ἀδελφοι = எல்லாச் சகோதரரும்
(இங்கே πας பன்மைப் பெயரோடு வந்து "எல்லா" எனப் பொருள்படுகிறது)

(இ) πας ὁ ὀχλος = முழுக் கூட்டமும்
παν τεκνον = ஒவ்வொரு பிள்ளையும்
(πας ஒருமையில் ஒரு பெயரோடு சேர்ந்து நின்று "முழு" அல்லது "ஒவ்வொரு" எனப் பொருள்படும்)

2. εἱς, μια, ἑν = ஒரு

| | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய் வேற். | εἱς | μια | ἑν |
| செயப். வேற். | ἑνα | μιαν | ἑν |
| உடைமைப். வேற். | ἑνος | μιας | ἑνος |
| கொடைப். வேற். | ἑνι | μιᾳ | ἑνι |

இது ஆண்பாலிலும் அலிப்பாலிலும் ἑν எனும் பகுதியின்மேல் 3–ஆம் இன விகுதிகளையும், பெண்பாலில் μι எனும் பகுதியின்மேல் ἡμερα என்பதின் விகுதிகளையும் பெறுகிறது. οὐδε, μηδε என்கிற எதிர் மறைச் சொற்கள் இதனோடு பொருந்தி நிற்பதால், οὐδεις οὐδεμια οὐδεν (= ஒருவரும் இல்லை, ஒன்றும் இல்லை) μηδεις μηδεμια μηδεν (= ஒரு வரும் இல்லை, ஒன்றும் இல்லை) ஆகிய இரு எதிர்மறைப் பெயர்கள் உருவெடுக்கும்.

---

பயிற்சி 21, பக். 108 காண்க.

## (ஈ) பதிற்பெயர்கள் (Pronouns)

தமிழில் இவை சரியான பெயர்ச்சொற்களாகக் கருதப்படும். கிரேக்க இலக்கணப்படியோ இவை சரியான பெயர்களாக அல்ல, பெயர்களுக்

குப் பதிலாக நிற்கக் கூடிய ஒரு தனி வகைச் சொற்களாக எண்ணப் படும். அதனுல்தான் பதிற்பெயர் என்கிற பெயர் வந்தது. இவற்றில் கீழ்க்காணும் வகைகள் முக்கியமானவை :

1. <u>இடப் பதிற்பெயர்கள்</u> (personal pronouns) :

(அ) தன்மை

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| எழுவாய் வேற். | ἐγω (= நான்) | ἡμεις (= நாம், நாங்கள்) |
| செயப். வேற். | ἐμε, με | ἡμας |
| உடைமைப். வேற். | ἐμου, μου | ἡμων |
| கொடைப். வேற். | ἐμοι, μοι | ἡμιν |

(ஆ) முன்னிலை

| | | |
|---|---|---|
| எழுவாய் வேற். | συ (= நீ) | ὑμεις (= நீங்கள்) |
| செயப். வேற். | σε | ὑμας |
| உடைமைப். வேற். | σου | ὑμων |
| கொடைப். வேற். | σοι | ὑμεις |

(இ) படர்க்கை

αὐτος, αὐτη, αὐτο (அவன், அவள், அது) எனும் பதிற் பெயர் ἐκεινος என்பதைப் போல உருபேற்கிறது.

எ–கா :

ἡμεις ἡλθομεν = நாம் (அல்லது நாங்கள்) வந்தோம்
ἐγω ὑμας ἐβλεψα = நான் உங்களைக் கண்டேன்
ἐν αὐτῳ πιστευετε = அவர்மேல் நம்பிக்கை வைக்கிறீர்கள்
αὐτος ἐσωσεν αὐτους = அவர் அவர்களை இரட்சித்தார்

இம்மூன்றும் அடிக்கடி உடைமைப் பொருள் வேற்றுமை யில் வரும்.

எ–கா : ἡ οἰκια ἐμου = என் வீடு
ὁ ἀδελφος ὑμων = உங்கள் சகோதரன்
τα τεκνα αὐτων = அவர்களுடைய பிள்ளைகள்
(உடைமைப் பெயரடைகளும் அதே பொருளைத் தரும்) பக். 14 காண்க)

αὐτος என்பது வேறே இரண்டு முறைகளிலும் வழங்கப் பேறும் :

(i) அது ஒரு பெயரோடு சேர்ந்து பயனிலைக்குரிய இடத்தில் நிற்கும்போது (பக். 12 காண்க), அப்பெயரை வலியு றுத்திக் குறிக்கும்.

எ–கா : αὐτος ὁ Κυριος } σωσει ημας
ὁ Κυριος αὐτος }
ஆண்டவர் தாமே நம்மை இரட்சிப்பார்

(ii) அது ஒரு பெயரோடு சேர்ந்து அடைமொழிக்குரிய இடத்தில் நிற்கும்போது (பக். 12 காண்க), "அதே" எனப் பொருள்படும்.

எ–கா : ὁ αὐτος ἀνθρωπος = அதே மனிதன்
τα αὐτα τεκνα = அதே பிள்ளைகள்

2. தற்சுட்டுப் பதிற்பெயர்கள் (reflexive pronouns) :

ஒரு வாக்கியத்தின் பயனிலையில் நிற்கும் ஒரு பதிற்பெயர் அதே வாக்கியத்தின் எழுவாயைக் குறிக்கும்போது, கிரேக்கத்தில் ஒரு தற்சுட்டுப் பதிற்பெயர் பயன்படுத்தப்படும்.

எ–கா : (அ) எனக்கு நானே போதிக்கிறேன்

(ஆ) அவன் தன்னைத்தானே இரட்சிக்கிறான்

(இ) அவர்கள் தங்கள் மக்களை அழைக்கிறார்கள்

கீழ்க்கோடிட்ட பெயர்கள் அவ்வாக்கியங்களின் எழுவாய்களைக் குறிக்கிறதனால், கிரேக்கத்தில் அவை தற்சுட்டுப் பதிற்பெயர்களாக மொழி பெயர்க்கப்படும். அவை பயனிலையில் வருவதால், ஒருபோதும் ஒரு வாக்கியத்தின் எழுவாயாய் இருக்க முடியாது. ஆகவே அவற்றில் எழுவாய் வேற்றுமை இல்லை.

| | | | படர்க்கை | | |
|---|---|---|---|---|---|
| ஒருமை | தன்மை | முன்னிலை | ஆண். | பெண். | அலிப். |
| செயப். வேற். | ἐμαυτον | σεαυτον | ἑαυτον | ἑαυτην | ἑαυτο |
| உடைமைப். வேற். | ἐμαυτου | σεαυτου | ἑαυτου | ἑαυτης | ἑαυτου |
| கொடைப். வேற். | ἐμαυτῳ | σεαυτῳ | ἑαυτῳ | ἑαυτῃ | ἑαυτῳ |

பன்மையில், கீழ்க்காணும் ஒரே சொல் மூன்று இடங்களுக்கும் பொது எனினும் அது பால் வேறுபாட்டைக் காட்டும் :

| பன்மை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| செயப். வேற். | ἑαυτους | ἑαυτας | ἑαυτα |
| உடைமைப். வேற். | ἑαυτων | ἑαυτων | ἑαυτων |
| கொடைப். வேற். | ἑαυτοις | ἑαυταις | ἑαυτοις |

எ–கா : (அ) ἐγω ἐμαυτον διδασχω

(ஆ) (αὐτος) ἑαυτον σωζει

(இ) (αὐτοι) τους υἱους ἑαυτων καλουσιν

3. எதிர் எதிர்த் தொடர்புப் பதிற்பெயர் (reciprocal pronoun): ஒரு கூட்டத்தினர் தங்களுக்குள் அல்லது தங்களுக்கு ஒரு காரியத்தைச் செய்வதைக் குறிக்க, எதிர் எதிர்த் தொடர்புப் பதிற்பெயர் பயன் படுத்தப்படும்.

எ—கா: (அ) ஒருவரை ஒருவர் நேசிக்கிறோம்

(ஆ) ஒருவருக்கொருவர் இந்த வார்த்தைகளை அறிவிக் கிறார்கள்

இப்பொருளைத் தரும் கிரேக்க எதிர் எதிர்த் தொடர்புப் பதிற்பெயர் மூன்று இடங்களுக்கும் பொது; அது பால் வேறுபாட்டை மட்டும் காட் டும். அதில் எழுவாய் வேற்றுமையும் ஒருமையும் இல்லை.

| | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| செயப். வேற். | ἀλληλους | ἀλληλας | ἀλληλα |
| உடைமைப். வேற். | ἀλληλων | ἀλληλων | ἀλληλων |
| கொடைப். வேற். | ἀλληλοις | ἀλληλαις | ἀλληλοις |

எ—கா: (அ) (ἡμεις) φιλουμεν ἀλληλους

(ஆ) τουτους τους λογους ἀλληλοις ἀγγελλουσιν

4. சுட்டுப் பதிற்பெயர்கள் (demonstrative pronouns):

*ἐκεινος*, **οὑτος** ஆகியவை சுட்டுப் பெயரடைகளாகப் பயன்படுத்தப் படும் முறை முன்னுலே விளக்கப்பட்டது (பக். 14–15 காண்க). அவை ஒரு பெயர்ச்சொல்லைத் தழுவாமல் தனியாக நிற்கும்போது, அவை சுட்டுப் பதிற் பெயர்கள் ஆகும். அப்போது **οὑτος, αὑτη, τουτο** என்பது "இவன், இவள், இது" எனவும், **ἐκεινος, —η, —ο** என்பது "அவன், அவள், அது" எனவும் பொருள்படும்.

எ—கா: **ἐκεινος τας ἁμαρτιας ἡμων αἰρει**
அவர் நம் பாவங்களை நிவிர்த்தி செய்கிறார்
**ἐν τῳ ὀνοματι ἐκεινου πιστευουσιν**
அவரது நாமத்தில் நம்பிக்கை வைக்கிறார்கள்

**ταυτα ἠκουσαμεν** = இவற்றைக் கேட்டோம்

**αὐτος** என்பதும் "அவன்" எனப் பொருள்படும் என்று மேலே கூறப் பட்டது (பக். 48). வழக்கத்தில் **ἐκεινος** என்பதைவிட **αὐτος** என்பது அதிகமாக வரும். வலியுறுத்திப் பேசும்போது மட்டும் **ἐκεινος** என்பது சுட்டுப் பதிற்பெயராகப் பயன்படுத்தப்படும்.

5. வினுப் பதிற்பெயர் (interrogative pronoun):

**τις, τι** எனும் பதிற்பெயர் ஒரு ஒலியழுத்தக்குறியைப் பெறும் போது (**τίς, τί**), அது "எவன், எவள், எது" அல்லது "யார், யாது"

எனப் பொருள்படுகின்ற வினாப் பதிற்பெயர் ஆகும். அது ஆண் பெண் பொது மூன்றும் இனப் பெயரடையைப் போல உருபேற்கும்.

| | ஒருமை | | பன்மை | |
|---|---|---|---|---|
| | ஆண், பெண். | அலிப். | ஆண், பெண். | அலிப். |
| எழுவாய் வேற். | τίς | τί | τίνες | τίνα |
| செயப். வேற். | τίνα | τί | τίνας | τίνα |
| உடைமைப். வேற். | ...τίνος... | | ...τίνων... | |
| கொடைப். வேற். | ...τίνι... | | ...τίσι(ν)... | |

எ—கா : *τίς τας ἐντολας του θεου τηρει;*
யார் கடவுளின் கட்டளைகளைக் கடைப்பிடிக்கிறார்?

*τουτο παρα τίνος ἐλαβες;*
இதனை யாரிடத்திலிருந்து பெற்றுக்கொண்டாய்?

6. பொதுநிலைப் பதிற்பெயர் (**indefinite pronoun**):

τις ஒரு ஒலியழுத்தக் குறியுமின்றி (அல்லது மேற்காட்டிய ஒலியழுத்தக் குறி யல்லாத வேறோர் ஒலியழுத்தக்குறியைப் பெற்று) வரும் போது, அது "யாரோ" அல்லது "யாராவது" எனப் பொருள்படும் பொதுநிலைப் பதிற்பெயர் ஆகும்.

எ—கா : *εἰπεν τις* = யாரோ சொன்னார்
*εἰπετε τι* = ஏதோ சொன்னீர்கள்

மேலும் τις ஒலியழுத்தக்குறி இல்லாமல் ஒரு பெயரைத் தழுவுகின்ற பெயரடையாகவும் வரலாம். அப்போது அது பொதுநிலைச் சுட்டுக்கு ஒப்பாகும்.

எ—கா : *ἀνθρωπος τις ἠλθεν* = ஒரு மனிதன் வந்தான்

---

பயிற்சி 22, பக். 109 காண்க.

## (உ) பெயரடை ஒப்பீட்டுத் தரங்கள் (Degrees of Comparison of Adjectives)

1. அவன் நீதியுள்ளவன்
2. அவன் என்னைவிட / என்னிலும் } நீதியுள்ளவன்
3. அவன் எல்லாரிலும் / மிகமிக } நீதியுள்ளவன்

மேற்கண்ட மூன்று தமிழ் வாக்கியங்களிலும் "நீதியுள்ளவன்" என்கிற சொல் எவ்வித வேறுபாடுமின்றி வருகிறது. கிரேக்கத்திலோ "நீதியுள் ளவன்" என்பது ஒவ்வொரு வாக்கியத்திலும் ஒவ்வொரு உருவம் பெற்று வரும்.

1. *αὐτος ἐστι* δικαιος* = அவன் நீதியுள்ளவன்

இங்கு ஒருவனிடம் குறிப்பிட்ட ஒரு தன்மை இருக்கிறது எனச் சொல்லப் படுகிறது. கிரேக்கப் பெயரடை சாதாரண உருவத்தில் வந்தது. அந்த உருவத்திற்கு இயல்தரம் என்று பெயர்.

2. *αὐτος ἐστι δικαιοτερος* { *ἐμου* / *ἡ ἐγω* }

அவன் { என்னிலும் / என்னைவிட } நீதியுள்ளவன்

இங்கு ஒருவன் இன்னொருவனோடு ஒப்பிடப்படுகிறான். ஆகவே கிரேக்கப் பெயரடை விரிவான ஓர் உருவம் பெற்று வறுகிறது. இதற்கு உறழ்தரம் என்று பெயர்.

3. *αὐτος ἐστι δικαιοτατος*

அவன் { எல்லாரிலும் / மிகமிக } நீதியுள்ளவன்

இங்கு ஒருவன் குறிப்பிட்ட ஒரு தன்மையில் எல்லாரிலும் சிறந்தவன் அல்லது மிகச் சிறந்தவன் எனக் கூறப்படுகிறது. ஆகவே கிரேக்கப் பெயரடை வேறொரு விரிவான உருவம் பெற்று வருகிறது. இதற்கு உச்சத்தரம் என்று பெயர்.

குறிப்புக்கள் :

1. ஒப்பீட்டுத் தரங்கள் உருவெடுக்கும் முறை :

(அ) பொதுவாக *ος* எனும் உருபு பகுதியை விட்டு நீங்கும். அதற்குப் பதிலாக உறழ்தரத்தில் **οτερος** எனும் விரிவும் உச்சத்தரத்தில் **οτατος** எனும் விரிவும் பகுதியோடு சேரும்.

| | | |
|---|---|---|
| எ-கா : | **δικαι ος** | இயல்தரம் |
| | **δικαι οτερος** | உறழ்தரம் |
| | **δικαι οτατος** | உச்சத்தரம் |

(ஆ) ஒரு பெயரடையின் பகுதி ஒரே தனிக் குறிலைக் கொண்டுள்ள அசையாய் இருப்பின், உறழ்தரத்தில் **ωτερος** என்பதும் உச்சத்தரத்தில் **ωτατος** என்பதும் பகுதியுடன் சேரும்.

* *ἐστι* = இருக்கிறான் (பக். 63 காண்க).

எ–கா: σοφος என்பதன் பகுதி σοφ என்பதாம்;
அது ஒரு தனிக் குறிலைக் கொண்டுள்ள அசை;
ஆகவே σοφος என்பதின் ஒப்பீட்டுத் தரங்கள் பின்வரு மாறு உருவாகும்:

σοφος σοφωτερος σοφωτατος

(இ) ἀληθης போன்ற மூன்றும் இனப் பெயரடைகளில், τερος என்பதும் τατος என்பதும் ἀληθες என்கிற அலிப்பால் எழுவாய் வேற். ஒருமையுடன் சேரும்.

எ–கா: ἀληθης ἀληθεστερος ἀληθεστατος

2. உருபேற்கும் முறை: உறழ் உச்சத் தரப் பெயரடைகள், இயல் தரப் பெயரடைகளைப் போல், தாங்கள் தழுவி நிற்கும் பெயர்களோடு பாலிலும் வேற்றுமையிலும் எண்ணிலும் இசைந்திருத்தல் வேண்டும். உறழ்தரப் பெயரடைகள் ἁγιος போலவும், உச்சத்தரப் பெயரடைகள் ἀγαθος போலவும் உருபேற்கும்.

எ–கா: σοφωτερος σοφωτερα σοφωτερον (உறழ்தரம்)
ἀληθεστατος ἀληθεστατη ἀληθεστατον (உச்சத்தரம்)

3. ஒப்பிடுதல்: கிரேக்கத்தில் ஒரு பொருளை இன்னொரு பொருளோடு ஒப்பிடும் முறைகள் இரண்டு. இரண்டிலும் உறழ்தரப் பெயரடை பயன்படும்.

(அ) ஒப்பீட்டு உடைமைப் பொருள் வேற்றுமை:

எ–கா: αὐτος ἐστι δικαιοτερος ἐμου
அவன் என்னிலும் நீதியுள்ளவன்

இந்த வாக்கியத்தில் "என்னிலும்" என்பது ἐγω என்கிற பதிற் பெயரின் உடைமைப் பொருள் வேற்றுமையாக வந்தது எனக் காண்க.

(ஆ) ἤ எனும் இடைச்சொல்:

எ–கா: αὐτος ἐστι δικαιοτερος ἤ ἐγω
அவன் என்னைவிட நீதியுள்ளவன்

இங்கு ἤ என்பதோடு ἐγω என்பது எழுவாய் வேற்றுமையில் வந்தது. ἤ என்பதற்கு முன்நிற்கும் பெயரும் (இங்கே αὐτος) பின்நிற்கும் பெயரும் (இங்கே ἐγω) ஒரே வேற்றுமையில் வரல் வேண்டும் என்பது விதி. அதற்கேற்ப, αὐτος என்பது எழுவாய் வேற்றுமையில் வந்தமையால், ἐγω என்பதும் எழுவாய் வேற்றுமையில் வந்தது.

4. புறநடை: சில பெயரடைகளின் உறழ் உச்சத்தரங்கள் விதி விலக்காக உருவெடுக்கும்.

எ–கா:

| இயல்தரம் | | பொருள் | உறழ்தரம் | உச்சத்தரம் |
|---|---|---|---|---|
| ἀγαθος | = | நல்ல | κρεισσων | κρατιστος |
| κακος | = | கெட்ட | χειρων | — |
| μεγας | = | பெரிய | μειζων | μεγιστος |
| μικρος | = | சிறிய | μικροτερος | ἐλαχιστος |
| πολυς | = | பல | πλειων | πλειστος |

ων என்று முடியும் உறழ்தரப் பெயரடைகள் உருபேற்கும் முறையைப் பக். 45 இல் காண்க.

## (ஊ) வினையடைகள்

வினையடைகள் வினைகளுடன் தொடர்புடையன ஆதலால், அவற்றை இங்கு விளக்குவதைவிட வினையியல் எனும் தலைப்பின்கீழ் அவற்றை விளக்குவது பொருந்தும் எனலாம். ஆயினும் அவை பெயரடைகளிலிருந்து பிறக்கிறபடியால், அவற்றை இந்த அதிகாரத்தில் பெயரடைகளுடன் சேர்த்துப் படிப்பது நலம் எனத் தோன்றுகிறது.

ஒரு வினையடை ஒரு வினைச்சொல்லைத் தழுவி நின்று அவ்வினை எவ்வாறு செய்யப்படுகிறது என விளக்குகிறது.

எ–கா: அவன் <u>அழகாகப்</u> பாடினான்
அவள் <u>விரைவாய்</u> ஓடினாள்

இவ்விரு வாக்கியங்களிலும் கீழ்க்கோடிட்ட சொற்கள் கிரேக்கத்தில் வினையடைகளாக மொழிபெயர்க்கப்படும்.

1. <u>உருவெடுக்கும் முறை</u>: ஒரு பெயரடையின் ஆண்பால் உடைமைப் பொருள் வேற்றுமை பன்மை உருபின் ஈற்று ν–மெய் ς–மெய் யாகத் திரிவதால், அந்தப் பெயரடை வினையடையாக மாறும்.

எ–கா:

δικαιος பெயரடை முதல்நிலை (=நேர்மையான, நீதியுள்ள)
δικαιω<u>ν</u> ஆண்பால் உடைமைப். வேற். பன்மை
δικαιω<u>ς</u> அதிலிருந்து பிறக்கும் வினையடை (=நேர்மையாக)

2. <u>ஒப்பீட்டுத் தரங்கள்</u>: உறழ்தர வினையடையாக உறழ்தரப் பெயரடையின் அலிப்பால் ஒருமையும், உச்சத்தர வினையடையாக உச்சத்தரப் பெயரடையின் அலிப்பால் பன்மையும் பயன்படுத்தப்படும்.

எ–கா:

δικαιως இயல்தர வினையடை
δικαιοτερον உறழ்தர வினையடை
δικαιοτατα உச்சத்தர வினையடை

3. புறநடை: சில வினையடைகளின் உறழ் உச்சத்தரங்கள் விதி விலக்காக உருவெடுக்கும்.

| எ–கா: இயல்தரம் | பொருள் | உறழ்தரம் | உச்சத்தரம் |
|---|---|---|---|
| εὐ | நன்றாக | κρεισσον | — |
| μαλα | அதிகமாக | μαλλον | μαλιστα |
| πολυ | அதிகமாக | πλειον, πλεον | — |

εὐ போல் இயல்தரத்தில் சில வினையடைகள் தனிப்பட்ட முறையில் உரு வெடுக்கும்.

---

பியிற்சி 23, பக். 110 காண்க.

# அதிகாரம் 5

## வினையியல் (ii)

மூன்றும் அதிகாரத்தில் நாம் ஒரு கிரேக்க வினையின் எல்லாக் காலங்களுக்கும் உரிய சாற்றுப் பாங்குகளைப் படித்தோம். இந்த அதி காரத்தில் ஒரு கிரேக்க வினையில் வரும் ஏனைய வினைப் பாங்குகள் விளக்கப்படும். எதிர்காலத்திலும் நிகழ்கால நிறைவிலும் சாற்று அல்லாத பாங்குகள் வருமாயினும், நிகழ்காலம் இறந்த காலத் தனிப்பு இவற்றில் வரும் சாற்று அல்லாத பாங்குகள் முக்கியமானவை.

## (அ) ஏவல் பாங்கு (Imperative Mood)

தமிழில் செய், செய்யும், செய்யுங்கள் என்பவை ஏவல் வினைகள். அது போல், கிரேக்க மொழியில் ஏவல் எனும் வினைப் பாங்கு ஒரு கட்ட ளையைக் கொடுக்கவும் ஒரு வேண்டுகோளைச் செய்யவும் பயன்படும். எனினும் கிரேக்க ஏவல் பாங்குக்கும் தமிழ் ஏவல் வினைக்கும் இடையே இரண்டு முக்கியமான வேறுபாடுகள் உண்டு.

1. இடம்: தமிழ் ஏவல் வினை முன்னிலையில் மட்டும் வரும் (எ–கா: நீ செய். நீங்கள் செய்யுங்கள், முதலியன). கிரேக்கத்திலோ படர்க்கையிலும் ஏவல் உண்டு. தமிழில் படர்க்கை ஏவல் இல்லாததால், கிரேக்கப் படர்க்கை ஏவலை வியங்கோள் வினையைக் கொண்டு மொழி பெயர்த்தல் வேண்டும் (எ–கா: அவன் செய்வானாக, அவர்கள் செய் வார்களாக, முதலியன).

2. காலம்: தமிழில் ஏவல் வினை எதிர்காலமாகக் கருதப் படு கிறது. கட்டளையிடப்பட்ட செயல் எதிர்காலத்தில் செய்யப்படல் வேண் டும் ஆதலால், அந்தக் கருத்துத் தவறன்று. எனினும் கிரேக்கத்தில் ஏவல் பாங்கு எதிர்காலத்தில் அன்று, நிகழ்காலத்திலும் இறந்த காலத் தனிப்பிலும் வரும். இதில் கிரேக்க வினைகளைப் பற்றிய அடிப் படையான ஓர் உண்மை விளங்குகிறது. அது யாதெனில், நிகழ்வுப் பொருள் நிகழ்காலத்தின் சாற்றுப் பாங்கிலேயல்லாமல் அதன் மற்றப் பாங்குகளில் வராது. இறப்புப் பொருளும் இறந்த காலத் தனிப்பின் சாற்றுப் பாங்கிலேயல்லாமல் அதன் மற்றப் பாங்குகளில் வராது. நிகழ் காலத்தின் மற்றப் பாங்குகள் எந்தக் காலத்திலும் தொடர்ந்து செய் யப்படும் ஒரு செயலையும், இறந்த காலத் தனிப்பின் மற்றப் பாங்குகள் எந்தக் காலத்திலும் ஒரே சமயத்தில் செய்து முடிக்கப்படும் ஒரு செயலை

யும் குறிக்கும். ஆகவே ஏவல் பாங்கில் நிகழ்கால ஏவல் தொடர்ந்து ஒரு காரியத்தைச் செய்ய வேண்டும் என ஏவுகிறது; இறந்த காலத் தனிப்பு ஏவல் ஒரே சமயத்தில் ஒரு காரியத்தைச் செய்து முடிக்க வேண்டும் என ஏவுகிறது. இறப்புப் பொருள் இறந்த காலத் தனிப் பின் சாற்று அல்லாத பாங்குகளால் உணர்த்தப் படவில்லை ஆதலின், அவற்றில் இறந்த கால முன்னொட்டு வராது என்பது கவனிக்கத் தக்கது.

எ—கா :

| | | |
|---|---|---|
| நிகழ்கால ஏவல் | τας ἐντολας τηρειτε | = கட்டளைகளைத் (தொடர்ந்து) கையாளுங்கள் |
| | ἐν τῳ φωτι μενε | = ஒளியில் நிலைத்திரு |
| இறந்த காலத் தனிப்பு ஏவல் | τουτους τους λογους γραψατε | = இந்த வார்த்தைகளை எழுதுங்கள் (எழுதிவிடுங்கள்) |
| | κυριε, ἡμας σωσον | = ஆண்டவரே, எங்களை இரட்சியும் |

ஏவல் பாங்கு கீழ்க்காணுமாறு உருவெடுக்கும் :

| | செய்வினை | தற்பொருட்டு வினை | செயப்பாட்டு வினை |
|---|---|---|---|
| | | நிகழ் கால ஏவல் | |
| ஒருமை | | | |
| முன்னிலை | λυε = அவிழ் | ... λυου = அவிழ்க்கப்படு | ... |
| படர்க்கை | λυετω = அவிழ்ப்பானாக | ... λυεσθω = அவிழ்க்கப்படுவானாக | ... |
| பன்மை | | | |
| முன்னிலை | λυετε = அவிழுங்கள் | ... λυεσθε = அவிழ்க்கப் படுங்கள் | ... |
| படர்க்கை | λυετω-σαν = அவிழ்ப்பார்களாக | ... λυεσθ-ωσαν = அவிழ்க்கப்படுவார்களாக | ... |

1—ஆம் இறந்த காலத் தனிப்பு ஏவல்

| | | | |
|---|---|---|---|
| ஒருமை | | | |
| முன்னிலை | λυσον | λυσαι | λυθητι |
| படர்க்கை | λυσατω | λυσασθω | λυθητω |
| பன்மை | | | |
| முன்னிலை | λυσατε | λυσασθε | λυθητε |
| படர்க்கை | λυσατωσαν | λυσασθωσαν | λυθητωσαν |

## 2–ஆம் இறந்த காலத் தனிப்பு ஏவல்

| | | | |
|---|---|---|---|
| ஒருமை | | | |
| முன்னிலை | βαλε | γενου | σταληθι |
| படர்க்கை | βαλετω | γενεσθω | σταλητω |
| பன்மை | | | |
| முன்னிலை | βαλετε | γενεσθε | σταλητε |
| படர்க்கை | βαλετωσαν | γενεσθωσαν | σταλητωσαν |

குறிப்புக்கள் :

1. ஏவல் பாங்கு உருவெடுக்கும் முறை: சாற்றுப் பாங்கில் அந்தந்தக் காலத்தில் என்னென்ன இடைநிலைகள் வந்தனவோ, அந்த இடைநிலைகளே ஏவல் பாங்கிலும் வரும் (எ–கா : செய்யப்பாட்டு வினை 1–ஆம் இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு–ἐλυθην; ஏவல் பாங்கு—λυθητι). மேலும், படர்க்கை ஒருமை, முன்னிலைப் பன்மை, படர்க்கைப் பன்மை ஆகிய இடங்களில், எல்லா ஏவல்களும் முறையே ω, ε, ωσαν என்று முடிகின்ற விகுதிகளைப் பெறும் எனக் காண்க.

2. எதிர்மறை ஏவல்: ஏவல் பாங்கோடு சேர்ந்து வரும் எதிர் மறைச் சொல் μη என்பதே. அது நிகழ்கால ஏவலோடு சேர்ந்து வரும் போது, ஏற்கெனவே தொடங்கப் பட்ட ஒரு செயலை நிறுத்தல் வேண்டும் எனப் பொருள்படும்.

எ–கா : μη ἁμαρτανετε = பாவம் செய்யாதேயுங்கள், அல்லது பாவம் செய்வதை நிறுத்துங்கள் (இதனால் நீங்கள் பாவம் செய்து வருகிறீர்கள் என்று உணர்த்தப்படுகிறது).

இறந்த காலத் தனிப்பில் μη என்பது ஏவல் பாங்கோடு அன்று, சார்பு நிலைப் பாங்கோடு சேர்ந்து வரும் (பக். 71 காண்க).

3. பொருள் : கிரேக்கத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்க்குமிடத்து, நிகழ்கால ஏவலுக்கும் இறந்த காலத் தனிப்பு ஏவலுக்கும் இடையேயுள்ள பொருள் வேறுபாட்டையும் எதிர்மறை ஏவலின் பொருளையும் எல்லா இடங்களிலேயும் பொருத்தமான முறையில் உணர்த்த முடியாது. மேற்கண்ட எடுத்துக் காட்டுக்கள் இவ்வுண்மைக்குப் போதிய சான்றாகும். இயற்கையான தமிழ்நடையில் அந்தப் பொருள் வேறுபாடுகளை உணர்த்த முடியுமாயின், நல்லது; இல்லையேல், அவற்றை உணர்த்தாமல் விட்டுவிட வேண்டும்.

---

பயிற்சி 24, பக். 111 காண்க.

## (ஆ) செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சம் (Infinitive)

பொருளிலும் வழக்கத்திலும் இந்தக் கிரேக்க வினையெச்சப் பாங்கு தமிழில் வரும் செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சத்தைப் போன்ற தாகும். இதில் இட வேறுபாடும் எண் வேறுபாடும் இல்லை. எனினும் நான்கு காலங்களிலும் ஒவ்வொன்றுக்கும் செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சம் உண்டு. அந்நான்கிலும் நிகழ்கால வினையெச்சமும் இறந்த காலத் தனிப்பு வினையெச்சமும் முக்கியமானவை.

கிரேக்க வினையெச்சப் பாங்கு கீழ்க்காணுமாறு உருவெடுக்கும் :

| | செய்வினை | தற்பொருட்டு வினை | செயப்பாட்டு வினை |
|---|---|---|---|
| நிகழ்காலம் | λυειν | ... λυεσθαι ... | |
| எதிர்காலம் | λυσειν | λυσεσθαι | λυθησεσθαι |
| இறந்த காலத் | | | |
| தனிப்பு—1—ஆம் | λυσαι | λυσασθαι | λυθηναι |
| தனிப்பு—2—ஆம் | βαλειν | γενεσθαι | σταληναι |
| நிகழ்கால நிறைவு | λελυκεναι | ... λελυσθαι ... | |

குறிப்புக்கள் :

1. சாற்றுப் பாங்கு உருவெடுப்பதில் எந்த இடைநிலைகளும் சிறப்புக் கூறுபாடுகளும் வந்தனவோ, அந்த இடைநிலைகளும் சிறப்புக் கூறுபாடுகளும் அந்தந்தக் காலத்திற்குரிய வினையெச்சத்திலும் காணப் படுகின்றன.

2. பொருள் : ஏவல் பாங்கில் கண்டது போல, நிகழ்கால வினையெச்சம் நிகழ்காலத்தில் மட்டும் அன்று எந்தக் காலத்திலும் தொடர்ந்து செய்யப்படுகிற ஒரு செயலைக் குறிக்கும். இறந்த காலத் தனிப்பு வினையெச்சம் குறிப்பிட்ட ஒரு சமயத்தில் செய்து முடிக்கப் பட்ட ஒரு செயலைக் குறிக்கும்.

3. இறந்த கால முன்னொட்டு: இறந்த காலத் தனிப்பு வினையெச்சத்தில் இறப்புப் பொருள் இல்லாததால், அது இறந்த கால முன்னொட்டைப் பெறவில்லை எனக் காண்க.

4. வினையெச்சத்தின் எழுவாய்: ஒரு வினையின் எழுவாய் எழுவாய் வேற்றுமையில் நிற்கும் என்பது பொது விதி. வினையெச்சத்தின் எழுவாயோ வழக்கமாகச் செயப்படுபொருள் வேற்றுமையில் நிற்கும் (எடுத்துக்காட்டுக்களைக் கீழே காண்க).

5. எதிர்மறை: வினையெச்சப் பாங்குடன் μη எனும் எதிர்மறைச் சொல் பயன்படுத்தப்படும்.

செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சம் வழங்கப் பெறும் முறைகள் :

1. சில குறிப்பிட்ட வினைகளின் பொருள் ஒரு வினையெச்சத்தைக் கொண்டு முழுமை பெறும்.

எ–கா : θελω = விரும்புகிறேன்
ἀρχομαι = தொடங்குகிறேன் (செய்வினையுரு குன்றிய வினை)
δυναμαι = கூடியவனாயிருக்கிறேன், என்னால் முடியும் (செயப்பாட்டு வினை நிகழ்கால நிறைவு விகுதிகளைப் பெறும்)

αὐτον ἰδειν θελω = அவனைப் பார்க்க விரும்புகிறேன்

ἀλληλους μισειν ἠρξαντο = ஒருவரை ஒருவர் பகைக்கத் தொடங்கினர்

τουτο το ἐργον ποιησαι δυναμεθα = நம்மால் இந்த வேலையைச் செய்ய முடியும்

கீழ்க்காணும் இரண்டு வாக்கியங்களில், நிகழ்கால வினையெச்சத்திற்கும் இறந்த காலத் தனிப்பு வினையெச்சத்திற்கும் இடையேயுள்ள பொருள் வேறுபாடு நன்கு விளங்குகிறது :

μανθανειν θελω = கல்வி கற்க விரும்புகிறேன் (நிகழ்காலம்)

τουτο μαθειν θελω = இதைக் கற்றுக்கொள்ள விரும்புகிறேன் (இ. கா. த.)

2. இடம் சுட்டா வினைகள் (impersonal verbs) : தமிழில் வேண்டும், கூடும், தெரியும் போன்ற வினைகள் பொதுவாக இட விகுதிகளைப் பெறுவதில்லை. அவற்றின் பொருளை நிரப்ப, அவற்றுடன் செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சம் வழங்கப் பெறலாம் (எ–கா : சத்தமாய் வாசிக்க வேண்டும், அப்படிச் செய்யக் கூடாது, முதலியன *). அதனைப் போலக் கிரேக்கத்திலும் ஒரு வகையான வினைச்சொற்கள் உண்டு. அவை இடம் சுட்டா வினைகள் எனப்படும். அவற்றுடனும் ஒரு வினையெச்சம் வழங்கப் பெறும். அந்த வினையெச்சத்தின் எழுவாய் பொதுவாகச் செயப்படுபொருள் வேற்றுமையில் இருக்கும்.

எ–கா : δει = வேண்டும்
ἐξεστι(ν) = கூடும், தகும் (இதனோடு வரும் வினையெச்சத்தின் எழுவாய் கொடைப் பொருள் வேற்றுமையில் நிற்கும்)

* 62–ஆம் பக்கத்திலுள்ள குறிப்பையும் காண்க.

*ἐμε τα ἐργα του θεου ποιειν δει*

நான் கடவுளின் கிரியைகளைச் செய்ய வேண்டும்

*παιδια τοις πατρασιν αὐτων πειθεσθαι δει*

பிள்ளைகள் தங்கள் தந்தைமாருக்குக் கீழ்ப்படிய வேண்டும்

*οὐκ ἐξεστιν αὐτῳ θεραπευειν ἐν τῳ σαββατῳ*

அவர் ஒய்வுநாளில் சுகமளிக்கக் கூடாது

3. ஐயல் கட்டளை (**indirect command**): "அவருடைய கட்டளைகளைக் கைக்கொள்ளுங்கள்" என்பது நேர்க்கட்டளை. "கடவுள் அவர்களைத் தம் கட்டளைகளைக் கைக்கொள்ள ஏவினார்" என்பதில், "தம் கட்டளைகளைக் கைக்கொள்ள" என்பது ஐயல் கட்டளை. கிரேக்கத்திலும் ஐயல் கட்டளையில் செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சம் வழங்கப் பெறும்.

எ–கா : *ὁ θεος κελευει αὐτους τας ἐντολας αὐτου τηρειν*

கடவுள் அவர்களைத் தம் கட்டளைகளைக் கைக்கொள்ள ஏவுகிறார்

இங்கு *κελευει* என்பதற்கு நேர்ச் செயப்படுபொருளாக வந்த ***αὐτους*** என்பது (=அவர்களை) செயப்படுபொருள் வேற்றுமையில் உள்ளதைக் காண்க. *παραγγελλω* (=கட்டளையிடுகிறேன்) என்பதின் செயப்படு பொருள் கொடைப்பொருள் வேற்றுமையில் நிற்கும்.

எ–கா : *παραγγελλει αὐτοις τον Παυλον ἀγειν*

பவுலை அழைத்துக் கொண்டுவர அவர்களுக்குக் கட்டளையிடுகிறார்

4. சிறப்புச் சுட்டு வினையெச்சத் தொடர் (**articular infinitive**): அடிப்படையிலே கிரேக்க வினையெச்சம் ஒரு வகைத் தொழிற்பெயர் ஆகும். அலிப்பால் சிறப்புச் சுட்டு அதன்முன் நிற்கும்போது அது அவ்வாறே வழங்கப் பெறும்.

எ–கா : *ἐμοι το ζην Χριστος* = எனக்கு வாழ்வது கிறிஸ்து

*το προσκυνειν ἀγαθον* = தொழுதுகொள்வது நலம்

ஒரு சாதாரணப் பெயர்ச்சொல்லைப் போல, இந்தச் சிறப்புச் சுட்டு வினையெச்சத் தொடர் ஒரு முன்னிடைச்சொல்லோடு சேர்ந்து வரலாம்.

எ–கா : *ἐν τῳ ὑπαγειν αὐτον, παντες ἐθαυμαζον*

அவர் போகையில், எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்

*δια το αὐτον θεραπευσαι ἐν τῳ σαββατῳ, αὐτον ἐμισουν*

அவர் ஒய்வுநாளில் சுகமளித்ததினிமித்தம், அவர்கள் அவரைப் பகைத்தனர்

இந்த இரண்டு வாக்கியங்களிலும் வந்த வினையெச்சங்களின் எழுவாய்கள் செயப்படுபொருள் வேற்றுமையில் உள்ளன (αὐτον) எனக் காண்க. முதல் வாக்கியத்தில் வந்த நிகழ்கால வினையெச்சம் (ὑπαγειν) தொடர்ந்து செய்யப்பட்ட ஒரு செயலைக் குறிக்கும் (அதாவது, அவர் அந்த இடத்தை விட்டுப் போகக் கொஞ்ச நேரம் ஆனது; அவர் அப்படிப் போய்க் கொண்டிருந்த அதே சமயத்தில் மற்றவர்கள் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தனர்). இரண்டாம் வாக்கியத்தில் வந்த இறந்த காலத் தனிப்பு வினையெச்சம் (θεραπευσαι) ஒரு குறிப்பிட்ட சமயத்தில் செய்து முடிக்கப்பட்ட ஒரு செயலைக் குறிக்கும்.

சில சமயம் சிறப்புச் சுட்டு வராவிடினும், செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சம் ஒரு தொழிற்பெயராக வழங்கப் பெறலாம்.

எ—கா : ἡμας ὡδε μενειν ἀγαθον
நாம் இங்கே நிலைத்திருப்பது நலம்

5. நோக்கப் பொருள் (purpose) : தமிழில் வருவது போல, வினையெச்சம் நோக்கப் பொருளில் வரும்.

எ—கா : τῳ παιδιῳ προσκυνειν ἠλθομεν
பிள்ளையை வணங்க வந்தோம்

உடைமைப் பொருள் வேற்றுமையில் நிற்கும் சிறப்புச் சுட்டு வினையெச்சத் தொடரும் εἰς அல்லது προς எனும் முன்னிடைச் சொல்லோடு சேர்ந்து நிற்கும் சிறப்புச் சுட்டு வினையெச்சத் தொடரும் அதே பொருளை உணர்த்தும்.

எ—கா : του τῳ παιδιῳ προσκυνειν ἠλθομεν
προς το τῳ παιδιῳ προσκυνειν ἠλθομεν
பிள்ளையை வணங்குவதற்கு வந்தோம்

குறிப்பு : செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சம் அடிப்படையிலே ஒரு தொழிற்பெயர் என மேலே கூறப்பட்டது. அது சிறப்புச் சுட்டைப் பெற்று வரும்போது மட்டும் அன்று, அது ஐயல் கட்டளையிலும் இடம் சுட்டா வினையோடும் வரும்போதும் அது விளங்குகிறது. எவ்வாறெனில், ஐயல் கட்டளையில் வந்த வினையெச்சம் கட்டளையிடும் பொருளை உணர்த்தும் வினைக்குச் செயப்படுபொருளாய் இருக்கிறது. இடம் சுட்டா வினையுடன் வந்த வினையெச்சமும் அவ் வினைக்கு எழுவாயாய் இருக்கிறது (அவ்வாறே தமிழில், "சத்தமாய் வாசித்தல் வேண்டும்" எனச் சொல்வது முறை ஆகும்).

---

பயிற்சி 25, பக். 112 காண்க.

## (இ) εἰμι எனும் வினை

இது வரையிலும், நாம் படித்த வினைகள் யாவும் முதல் நிலையில் ω எனும் விகுதியைப் பெறுவனவாகும். முதல் நிலையில் μι எனும் விகுதியைப் பெறும் இன்னொரு வகை வினைகளும் உண்டு. அவற்றில் εἰμι (= இருக்கிறேன்) எனும் வினை முக்கியமான ஒன்று. அதில் கீழ்க் காணும் காலங்களும் பாங்குகளும் வரும் :

1. நிகழ்காலச் சாற்றுப் பாங்கு—

εἰμι = இருக்கிறேன்
εἶ = இருக்கிறாய் (ஒளியழுத்தக்குறியைக் காண்க)
ἐστι(ν) = இருக்கிறான், — றாள், — றது
ἐσμεν = இருக்கிறோம்
ἐστε = இருக்கிறீர்கள்
εἰσι(ν) = இருக்கிறார்கள்

2. நிகழ்காலச் சார்புநிலைப் பாங்கு (பக். 68 காண்க)—

ὦ ὦμεν
ᾖς ἦτε
ᾖ ὦσι(ν)

3. நிகழ்காலச் செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சம் — εἶναι

4. நிகழ்காலப் பெயரெச்சம் (பக். 64 காண்க)—

ὤν οὖσα ὄν
ὄντα οὖσαν ὄν, முதலியன

5. இறந்த காலத் தொடர்ச்சிச் சாற்றுப் பாங்கு—

ἤμην = இருந்தேன்
ἦς, ἦσθα = இருந்தாய்
ἦν = இருந்தான், — தாள், — தது
ἦμεν, ἤμεθα = இருந்தோம்
ἦτε = இருந்தீர்கள்
ἦσαν = இருந்தார்கள்

6. எதிர்காலச் சாற்றுப் பாங்கு—

ἔσομαι = இருப்பேன்
ἔσῃ = இருப்பாய்
ἔσται = இருப்பான், இருப்பாள், இருக்கும்
ἐσόμεθα = இருப்போம்
ἔσεσθε = இருப்பீர்கள்
ἔσονται = இருப்பார்கள்

எ—கா : ὁ ἀδελφος ἀγαθος = சகோதரன் நல்லவன்

ὁ ἀδελφος ἐστιν ἀγαθος = சகோதரன் நல்லவனாயிருக்கிறான்

ὁ Χριστος ἠν ἐν τῃ οἰκιᾳ = கிறிஸ்து வீட்டில் இருந்தார்

ἐκει πολλαι πολεις ἠσαν = அங்கே பல பட்டணங்கள் உண்டு

ἡμας ὡδε εἰναι ἀγαθον ἐστιν = நாம் இங்கே இருப்பது நலமாயிருக்கிறது

---

பயிற்சி 26, பக். 113 காண்க.

## (ஈ) பெயரெச்சம் (Participle)

கிரேக்கப் பெயரெச்சம் வினையிலிருந்து பிறந்த ஒரு பெயரடை. ஆகவே, அது ஒரு பெயரடையைப் போல ஒரு பெயரைத் தழுவி நிற்கும்; அது அந்தப் பெயரின் பால், வேற்றுமை, எண் ஆகியவற்றிற்கு ஏற்ற உருபை ஏற்கும். ஒரு வினையைப் போல அது வினை நிலை வேறுபாட்டையும் கால வேறுபாட்டையும் காட்டும்; ஒரு செயப்படுபொருளையும் பெற்று வரலாம்.

λυω என்பதின் செய்வினை நிகழ்காலப் பெயரெச்சம் பின்வருமாறு உருவெடுத்து உருபேற்கும்:

| ஒருமை | ஆண்பால் | பெண்பால் | அலிப்பால் |
|---|---|---|---|
| எழுவாய். வேற். | <u>λυων</u> | <u>λυουσα</u> | <u>λυον</u> |
| செயப். வேற். | <u>λυοντα</u> | λυουσαν | λυον |
| உடைமைப். வேற். | λυοντος | λυουσης | λυοντος |
| கொடைப். வேற். | λυοντι | λυουσῃ | λυοντι |
| **பன்மை** | | | |
| எழுவாய். வேற். | λυοντες | λυουσαι | λυοντα |
| செயப். வேற். | λυοντας | λυουσας | λυοντα |
| உடைமைப். வேற். | λυοντων | λυουσων | λυοντων |
| கொடைப். வேற். | λυουσι(ν) | λυουσαις | λυουσι(ν) |

πας, πασα, παν என்பதில் கண்டபடி (பக். 46), இதன் முதல்நிலை ஆண்பாலிலும் அலிப்பாலிலும் ஒரு முறையில் திரிந்து (λυων → λυοντ) 3—ஆம் இன உருபுகளை ஏற்கிறது; பெண்பாலில் அது இன்னொரு முறையில் திரிந்து (λυουσ) δοξα என்பதின் உருபுகளை ஏற்கிறது. எனவே கீழ்க்கோடிட்ட பதங்கள் தெரிந்திருந்தால், மாணவர் மீதியான யாவற்றையும் தாங்களே அறிந்துகொள்ளலாம்.

விதிப்படியான வினைகளின் பெயரெச்சங்கள் பின்வருமாறு உரு வெடுக்கும் :

| | செய்வினை | தற்பொருட்டு வினை | செயப்பாட்டு வினை |
|---|---|---|---|
| நிகழ்வு | λυων<br>λυουσα<br>λυον<br>(λυοντ-) | ... λυομενος<br>... λυομενη<br>... λυομενον | ...<br>...<br>... |
| எதிர்வு | λυσων<br>λυσουσα<br>λυσον<br>(λυσοντ-) | λυσομενος<br>λυσομενη<br>λυσομενον | λυθησομενος<br>λυθησομενη<br>λυθησομενον |
| இறந்த காலத் தனிப்பு—1—ஆம் | λυσας<br>λυσασα<br>λυσαν<br>(λυσαντ-) | λυσαμενος<br>λυσαμενη<br>λυσαμενον | λυθεις<br>λυθεισα<br>λυθεν<br>(λυθεντ-) |
| இறந்த காலத் தனிப்பு—2—ஆம் | βαλων<br>βαλουσα<br>βαλον<br>(βαλοντ-) | γενομενος<br>γενομενη<br>γενομενον | σταλεις<br>σταλεισα<br>σταλεν<br>(σταλεντ-) |
| நிகழ்கால நிறைவு | λελυκως<br>λελυκυια<br>λελυκος<br>(λελυκοτ-) | ... λελυμενος<br>... λελυμενη<br>... λελυμενον | ...<br>...<br>... |

மேற்கண்டவற்றுள் செய்வினைப் பெயரெச்சங்கள் யாவும் செயப்பாட்டு வினை இறந்த காலத் தனிப்புப் பெயரெச்சங்கள் இரண்டும் **πας, πασα, παν** என்பது போல உருபேற்கும் (**λελυκως** என்பது பெண்பாலில் **δοξα** என்பதின் உருபுகளை அல்ல, ἡμερα என்பதின் உருபுகளை ஏற்கும்). **μενος** என்று முடிகிற பெயரெச்சங்கள் யாவும் **ἀγαθος** போல உரு பேற்கும்.

பெயரெச்சங்கள் வழங்கப் பெறும் முறைகள் :

1. <u>வினையால் அணையும் பெயர்</u> : ஒரு பெயரெச்சம் சிறப்புச் சுட்டைப் பெற்று வரும்போது, அது ஒரு வகையான வினையால் அணையும் பெயர் ஆகும்.

எ—கா : *οἱ πιστευοντες* = விசுவாசிக்கிறவர்கள்
*οἱ τους ἀδελφους φιλουντες* = சகோதரரை நேசிக்கிறவர்கள்

2. செய்து எனும் வாய்பாட்டு வினையெச்சம் : ஒரு கிரேக்கப் பெயரேச்சம் அடிக்கடி ஒரு வினை முற்றைக் கொண்டு முடியும். அவ்வாறு வரும்போது அது தமிழில் செய்து எனும் வாய்பாட்டு வினையெச்சமாக மொழிபெயர்க்கப்படலாம்.

எ—கா : *ἐξελθων εἰδεν* = வெளியே வந்து பார்த்தான்
*ἀκουσαντες ἐθαυμαζον* = (அவர்கள்) கேட்டு ஆச்சரியப் பட்டனர்
*ταυτα εἰπων ἐπορευθη* = இவற்றைச் சொல்லிவிட்டுப் போனான்
*λαλων ἐπορευθη* = பேசிக் கொண்டே போனான்

கடைசி இரண்டு வாக்கியங்களில் நிகழ்காலப் பெயரெச்சத்திற்கும் இறந்த காலத் தனிப்புப் பெயரெச்சத்திற்கும் இடையேயுள்ள பொருள் வேறுபாடு நன்கு விளங்குகின்றது.

(அ) நிகழ்காலப் பெயரெச்சம் : வாக்கியத்தின் தலைமை வினை குறிக்கும் செயல் எந்த நேரத்தில் நடைபெறுகிறதோ, அதே நேரத்தில் நிகழ்காலப் பெயரெச்சம் குறிக்கும் செயலும் நடைபெறுகிறது (பேசிக் கொண்டே போனான்)

(ஆ) இறந்த காலத் தனிப்புப் பெயரெச்சம் : இது குறிக்கும் செயல் வாக்கியத்தின் தலைமை வினை குறிக்கும் செயல் நடைபெறுமுன் நடைபெற்று முடிந்துவிடுகிறது (சொல்லிவிட்டுப் போனான்)

இவ்வாறு வந்த பெயரெச்சத்தைத் தமிழில் ஒரு தனிக் காலக் கிளவியமாக மொழிபெயர்ப்பது சில சமயம் பொருந்தும்.

எ—கா : *ἐκ της οἰκιας ἐξελθων εἰδεν*
வீட்டிலிருந்து வெளிவந்தபிறகு பார்த்தான்
*πορευομενος παρα την ὁδον εἰδεν*
வழியில் நடந்து போகையில் பார்த்தான்

3. உடைமைப் பொருள் வேற்றுமைத் தனி நிலை (genitive absolute) : உடைமைப் பொருள் வேற்றுமையில் நிற்கும் ஒரு பெயரும் (அல்லது ஒரு பதிற்பெயரும்) அதனோடு இசைந்து நிற்கும் ஒரு பெயரெச்சமும் ஒரு தனிச் சார்நிலைக் கிளவியமாக வழங்கப் பெறலாம்.

அவ்வாறு அமைக்கப்பட்ட கிளவியம் பொதுவாகக் காலப்பொருளை உணர்த்துவதாகும். அதில் உடைமைப் பொருள் வேற்றுமையில் நிற்கும் பெயர் அக்கிளவியத்தின் எழுவாயாகவும், அப்பெயருடன் இசைந்து நிற்கும் பெயரெச்சம் அக்கிளவியத்தின் வினையாகவும் இருக் கும்.

எ—கா : *αὐτου εἰποντος τουτο, ἡ γυνη ἀπηλθεν*
அவர் இதைச் சொல்லியபின்பு, பெண் போய்விட்டாள்
*πορευομενων αὐτων ἐν τῃ ὁδῳ, ἠλθεν τις προς αὐτον*
அவர்கள் வழியில் நடந்து போகையில், ஒருவன் அவரிடம் வந்தான்

முதல் வாக்கியத்தில் **αὐτου** என்பது உடைமைப். வேற். தனி நிலையின் எழுவாயும், **εἰποντος** என்பது அதன் வினையும் ஆகும். பாலிலும் வேற்றுமையிலும் எண்ணிலும் **εἰποντος** என்பது **αὐτου** என்பதுடன் இசைந்திருப்பதைக் காண்க. இரண்டும் உடைமைப். வேற்றுமையில் உள்ளன. **εἰποντος** என்பது இறந்த காலத் தனிப்புப் பெயரெச்சம் ஆதலின், அது குறிக்கும் செயல் வாக்கியத்தின் தலைமை வினையாகிய **ἀπηλθεν** எனும் வினைக்குமுன்பு முடிந்துவிட்டது. இரண்டாம் வாக்கி யத்தில் **πορευομενων** என்பது நிகழ்காலப் பெயரெச்சம் ஆதலின், அதுவும் வாக்கியத்தின் தலைமை வினையாகிய **ἠλθεν** என்பதும் ஒரே சமயத்தில் நடைபெறுகின்றன.

4. துணைவினைப் பெயரெச்சத் தொடர் (**periphrastic tense**) :

*ἐν τῳ φωτι περιεπατουν*
*ἐν τῳ φωτι περιπατουντες ἠσαν*
ஒளியில் நடந்து கொண்டிருந்தார்கள்

மேற்கண்ட இரு வாக்கியங்களும் ஒரே பொருளுடையனவாம். முதல் வாக்கியத்தில் ஒரு சாதாரண இறந்த காலத் தொடர்ச்சிச் சாற்றுப் பாங்கு வந்தது (**περιεπατουν**). இரண்டாம் வாக்கியத்தில் ஒரு நிகழ்காலப் பெயரெச்சத்தையும் (**περιπατουντες**) **εἰμι** என்பதின் இறந்த காலத் தொடர்ச்சிச் சாற்றுப் பாங்கையும் கொண்டுள்ள ஒரு தொடர் வந்தது. அந்தத் தொடர் இறந்த காலத் தொடர்ச்சியின் சாற்றுப் பாங்குக்குச் சமம்.

*χαριτι ἐστε σεσωσμενοι*
நீங்கள் அருளினால் இரட்சிக்கப்பட்டிருக்கிறீர்கள்

இங்கு **εἰμι** என்பதின் நிகழ்காலச் சாற்றுப் பாங்கு **σωζω** என்பதின் செயப்பாட்டு வினை நிகழ்கால நிறைவுப் பெயரெச்சத்துடன் துணைவினை யாக வந்தது. அவ்வாறு உண்டான தொடர் நிகழ்கால நிறைவுச் சாற்றுப் பாங்குக்குச் சமம்.

5. பார்த்தல் என்று பொருள்படும் ஒரு வினைக்கு ஒரு பெயர்க் கிளவியம் செயப்படுபொருளாக நிற்கும்போது, ஒரு பெயரெச்சம் அந்தப் பெயர்க் கிளவியத்தின் வினையாக வழங்கப் பெறும்.

எ—கா : ἐγω αὐτον ἐρχομενον εἰδον

நான் அவர் வரக் / அவர் வருகிறதைக் } கண்டேன்

εὑρεν το δαιμονιον ἐξεληλυθος ἐκ του παιδιου

பேய் பிள்ளையை விட்டு நீங்கியதைக் / நீங்கியிருக்கிறதெனக் } கண்டுகொண்டான்

இந்த வாக்கியங்களில் **αὐτον ἐρχομενον** என்பதும் **το δαιμονιον ἐξεληλυθος ἐκ του παιδιου** என்பதும் முறையே **εἰδον** என்பதற்கும் **εὑρεν** என்பதற்கும் செயப்படுபொருளாக வந்த பெயர்க் கிளவியங்களாக இருக்கின்றன. அக்கிளவியங்களின் எழுவாய்கள் (**αὐτον, το δαιμονιον**) பொது விதிக்கு மாறுகச் செயப்படுபொருள் வேற்றுமையில் இருக்கின்றன. அக்கிளவியங்களின் வினைகள் (**ἐρχομενον, ἐξεληλυθος**) அந்த எழுவாய்களுடன் இசைந்துள்ள பெயரெச்சங்களாக வந்துள்ளன. இத்தகைய தொடருக்குச் "செயப்படுபொருள் வேற்றுமைப் பெயரெச்சத் தொடர்" என்று பெயர்.

---

பயிற்சி 27, பக். 113 காண்க.

## (உ) சார்புநிலைப் பாங்கு (Subjunctive Mood)

இந்த வினைப் பாங்கு பொதுவாய்ச் சார்புநிலைக் கிளவியங்களில் வழங்கப் பெறும். சில சமயம் அது தலைமைக் கிளவியங்களிலும் வழங்கப் பெறலாம். **λυω** என்பதின் நிகழ்காலச் சார்புநிலைப் பாங்கு கீழ்க்காணுமாறு உருவெடுக்கும் :

| செய்வினை | தற்பொருட்டு வினை<br>செயப்பாட்டு வினை |
|---|---|
| λυ ω | λυ ωμαι |
| λυ ῃς | λυ ῃ |
| λυ ῃ | λυ ηται |
| λυ ωμεν | λυ ωμεθα |
| λυ ητε | λυ ησθε |
| λυ ωσι(ν) | λυ ωνται |

இந்த விகுதிகள் சாற்றுப் பாங்கின் விகுதிகளைப் போன்றவை. ஆயினும் இவற்றில் ஒவ்வொன்றின் முதலாம் உயிரும் நெடிலாக வந்தது. இதே விகுதி வரிசைகள் இறந்த காலத் தனிப்புச் சார்புநிலைப் பாங்கிலும் வரும்.

| | செய்வினை | தற்பொருட்டு வினை | செயப்பாட்டு வினை |
|---|---|---|---|
| இறந்த காலத் | | | |
| தனிப்பு 1–ஆம் | $\lambda\upsilon + \sigma + \omega$ | $\lambda\upsilon + \sigma + \omega\mu\alpha\iota$ | $\lambda\upsilon + \theta + \omega$ |
| ,, 2–ஆம் | $\beta\alpha\lambda + \omega$ | $\gamma\epsilon\nu + \omega\mu\alpha\iota$ | $\sigma\tau\alpha\lambda + \omega$ |

குறிப்புக்கள் :

1. பொருள் : சாற்றுப் பாங்கு திட்டமாய் நடந்த ஒரு காரியத்தைச் சுட்டிக் காட்டுகிறது. சார்புநிலைப் பாங்கில் ஒரு வித ஐயப்பாடு உண்டு. அது உணர்த்தும் செயல் இன்னும் நடக்கவில்லை, ஒரு வேளை இனிமேல் நடக்கலாம் அல்லது நடக்காமலும் இருக்கலாம். ஆகவே அது எதிர் காலத்தைக் குறிக்கும் சார்நிலைக் கிளவியங்களில் அதிகமாக வழங்கப் பெறுகிறது.

2. எதிர்மறை : சார்புநிலைப் பாங்குடன் பயன்படும் எதிர்மறைச் சொல் μη என்பதே.

3. கால வேறுபாடு : நிகழ்காலச் சார்புநிலைப் பாங்கு தொடர்ந்து செய்யப்படும் ஒரு செயலையும், இறந்த காலத் தனிப்புச் சார்புநிலைப் பாங்கு குறிப்பிட்ட ஒரு சமயத்தில் செய்து முடிக்கப்படும் ஒரு செயலையும் குறிக்கும்.

சார்புநிலைப் பாங்கு வழங்கப் பெறும் முறைகள் :

1. நோக்கக் கிளவியம் (final or purpose clause)

ἠλθον ἱνα τον ἀδελφον μου ἰδω
நான் என் சகோதரனைப் பார்க்கும்படி வந்தேன்

இதில் "என் சகோதரனைப் பார்க்கும்படி" என்பது ஒரு நோக்கக் கிளவியம். அது கிரேக்கத்தில் ἱνα (அல்லது ὁπως) எனும் இணைப்பிடைச் சொல்லையும் சார்புநிலைப் பாங்கு வினையையும் கொண்டு மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

ἐκεινος ἱνα τας ἁμαρτιας ἡμων ἀρῃ ἠλθεν
அவர் நம் பாவங்களை நிவிர்த்தி செய்யும்படி வந்தார்
ἱνα ὑμεις μη ἁμαρτανητε, ταυτα γραφω
நீங்கள் பாவம் செய்யாதபடிக்கு இவற்றை எழுதுகிறேன்

2. எதிர்காலத்தைக் குறிக்கும் காலக் கிளவியம் (future temporal clause)

ἑως ἀν ἐλθῃς, ἐν τῃ οἰκιᾳ μενῶ

நீ வரும்வரைக்கும், நான் வீட்டில் தங்கியிருப்பேன்

ὁταν (=ὁτε+ἀν) ἐκεινος ἐλθῃ, ἡμεις ὀψομεθα αὐτον

அவர் வரும்போது, நாம் அவரைக் காண்போம்

இந்த வாக்கியங்களில் "நீ வரும்வரைக்கும்" என்பதும் "அவர் வரும் போது" என்பதும் எதிர்காலத்தைக் குறிக்கும் காலக் கிளவியங்கள். கிரேக்கத்தில் இரண்டு இடங்களிலும், ἀν எனும் இடைச்சொல்லுடன் கூடிய கால இணைப்பிடைச்சொல்லும் (ἑως, ὁτε) சார்புநிலைப் பாங்கு வினையும் (ἐλθῃς, ἐλθῃ) வந்தன.

3. எதிர்கால நிபந்தனைக் கிளவியம் (future conditional clause)

ἐαν ἐλθῃ, θεραπευσει σε

அவர் வந்தால் உன்னைச் சுகப்படுத்துவார்

இங்கே "அவர் வந்தால்" என்பது எதிர்கால நிபந்தனைக் கிளவியம். அப்பொருள் பயக்க, கிரேக்கத்தில் ἐαν எனும் இணைப்பிடைச்சொல்லும் (=εἰ+ἀν) சார்புநிலைப் பாங்கு வினையும் (ἐλθῃ) வந்தன (89–92–ஆம் பக்கங்களையும் காண்க).

4. பொதுநிலைக் கிளவியம் (indefinite clause)

ὁπου ἀν ἐλθῃς, ἐγω μετα σου ἐλευσομαι

நீர் எங்கே போனாலும், நான் உம்மோடு போவேன்

(நீர் எங்கே போகிறீரோ, அங்கெல்லாம் நான் உம்மோடு போவேன்)

இதில் "நீர் எங்கே போனாலும்" என்பது பொது நிலைக் கிளவியம். கிரேக்கத்தில் எங்கே என்பது ὁπου எனும் இணைப்பிடைச்சொல்லாக வும், போனாலும் என்பது ἐλθῃς எனும் சார்புநிலைப் பாங்கு வினையாக வும் வந்தன. ἀν என்பதும் வந்தது எனக் காண்க. (பொதுநிலைத் தழுவியல் கிளவியம், பக். 88).

5. ஐயல் கட்டளையும் ஐயல் வேண்டுதலும் (indirect command, petition)

εἰπε ἱνα οἱ λιθοι οὑτοι ἀρτοι γενωνται

இந்தக் கற்கள் அப்பங்களாகும்படி சொல்லும் (மத். 4³)

προσηυξαντο περι αὐτων ὁπως λαβωσιν πνευμα ἁγιον

அவர்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்ளும்படி அவர்களுக்காக ஜெபம்பண்ணினார்கள் (அப். 8¹⁵)

முதலாம் வாக்கியத்தில் ἵνα . . . γενωνται என்பது ஐயல் கட்டளை. அது εἰπε என்பதற்குச் செயப்படுபொருளாக நிற்கும் பெயர்க்கிளவியம். அதில் ἵνα எனும் இணைப்பிடைச்சொல்லுடன் சார்புநிலைப் பாங்கு வினை (γενωνται) வந்தது எனக் காண்க. இரண்டாம் வாக்கியத்தில் ὁπως λαβωσιν πνευμα ἁγιον எனும் பெயர்க்கிளவியம் ஐயல் வேண்டுதல் ஆகும். அது προσηυξαντο என்பதற்குச் செயப்படுபொருள். அதில் ἵνα என்பதற்குப் பதிலாக ὁπως எனும் இணைப்பிடைச்சொல் வந்தது (61–ஆம் பக்கத்தையும் காண்க).

கீழ்க்காணும் நான்கு விதங்களில் சார்புநிலைப் பாங்கு தலைமைக் கிளவியத்தில் வழங்கப் பெறும்:

1. தூண்டுதற் சார்புநிலைப் பாங்கு (hortatory subjunctive)

   ἀδελφοι, φιλωμεν ἀλληλους
   சகோதரரே, ஒருவரையொருவர் நேசிப்போமாக

இங்குத் தமிழில் வியங்கோள் வினை முற்று தன்மைப் பன்மையில் வந்த இடத்தில், கிரேக்கத்தில் சார்புநிலைப் பாங்கு தூண்டுதல் பொருளில் வந்தது.

2. ஆய்தற் சார்புநிலைப் பாங்கு (deliberative subjunctive)

   τί ποιησωμεν;
   என்னத்தைச் செய்வோம்?

ஒருவன் என்னத்தைச் செய்ய வேண்டும் என்று தெரியாமல் தனக்குள்ளே அல்லது மற்றவர்களோடு ஆலோசித்துச் சிந்திக்கும்போது, சார்புநிலைப் பாங்கு வழங்கப் பெறும். சார்பு நிலைப் பாங்கு இந்தப் பொருளில் வரும் எந்த வாக்கியமும் மேற்கண்ட எடுத்துக்காட்டினைப் போல ஒரு கேள்வியாயிருக்கும்.

3. வலு மறுப்பு (strong denial)

   οἱ λογου μου οὐ μη παρελθωσι
   என் வார்த்தைகள் ஒழிந்து போவதே இல்லை

ஒரு காரியத்தை மிக்க உறுதியாக மறுக்கும்போது, οὐ μη ஆகிய இரண்டு எதிர்மறை இடைச்சொற்களும் சேர்ந்து வரும். அவற்றுடன் வரும் வினைச்சொல் சார்புநிலைப் பாங்கில் நிற்கும்.

4. எதிர்மறை ஏவல் (prohibition, negative command)

   μη ἀκουσης αὐτου
   அவனுக்குச் செவி சாய்க்காதே

இங்கே μη என்பது இறந்த காலத் தனிப்புச் சார்புநிலைப் பாங்குடன் வந்து, விலக்கப் பட்ட செயலை நீ இன்னும் செய்யவில்லை என்றும் செய்யத் தொடங்கவும் வேண்டாம் என்றும் பொருள் தருகிறது. இதற்கும் μη என்பதுடன் பொருந்தி வந்த நிகழ்கால ஏவலுக்கும் இடையேயுள்ள பொருள்வேறுபாடு கவனிக்கத் தக்கது (பக். 58 காண்க).

---

பயிற்சி 28, பக். 114 காண்க.

## (ஊ) வியங்கோட் பாங்கு (Optative Mood)

கிரேக்க வினைச்சொல்லில் இன்னொரே வினைப்பாங்கு உண்டு. அது வியங்கோட் பாங்கு எனப்படும். ஏனெனில் தமிழ் வியங்கோள் வினையைப் போல அது எதிர்காலத்தைக் குறிக்கும் ஓர் அவாவை உணர்த்த வழங்கப் பெறும் (கீழே காண்க). விகுதியில் οι, αι, ει ஆகிய இணையுயிர்களில் ஒன்று வருவது அதற்கு அடையாளமாம்.

| | செய்வினை | தற்பொருட்டு வினை | செயப்பாட்டு வினை |
|---|---|---|---|
| நிகழ்காலம் | λυοιμι | ... λυοιμην | ... |
| | λυοις | ... λυοιο | ... |
| | λυοι | ... λυοιτο | ... |
| | λυοιμεν | ... λυοιμεθα | ... |
| | λυοιτε | ... λυοισθε | ... |
| | λυοιεν | ... λυοιντο | ... |
| இறந்த காலத் தனிப்பு—1–ஆம் | λυσαιμι | λυσαιμην | λυθειην |
| | λυσαις | λυσαιο | λυθειης |
| | λυσαι | λυσαιτο | λυθειη |
| | λυσαιμεν | λυσαιμεθα | λυθειμεν |
| | λυσαιτε | λυσαισθε | λυθειτε |
| | λυσαιεν | λυσαιντο | λυθειεν |
| ,, 2–ஆம் | βαλοιμι (மீதி நிகழ் காலம் போல) | γενοιμην (மீதி நிகழ் காலம் போல) | σταλειην (மீதி 1–ஆம் இ. கா. தனிப்புப் போல) |

εἰμι என்பதன் வியங்கோட் பாங்கு பின்வருமாறு உருவெடுக்கும் :

εἴην εἴης εἴη εἴημεν (εἶμεν) εἴητε (εἶτε) εἶεν

இவ்வினைப் பாங்கு புதிய ஏற்பாட்டில் அடிக்கடி வராது ஆயினும், அது வரும் இரண்டு விதங்கள் கவனிக்கத் தக்கவை :

1. எதிர்காலத்தைக் குறிக்கும் ஓர் அவா :

μη γενοιτο = அது ஆகாதிருப்பதாக

பவுல் தம் இறையியற் கருத்துக்களைத் தர்க்கமுறையில் விளக்குகையில் அடிக்கடி இத்தொடரைப் பயன்படுத்துவர் (எ–கா : ரோமர் 11[2]). திருத்திய தமிழ் மொழிபெயர்ப்பில் அது "இல்லவே இல்லை" என மொழி பெயர்க்கப் பட்டுள்ளது.

2. ஐயல் வினை :

ἐπυνθανετο τί [ἀν] εἰη τουτο

இது எதுவாய் இருக்குமோ என்று கேட்டான்

இங்கு **τί εἰη τουτο** என்கிற ஐயல் வினை **ἐπυνθανετο** என்பதற்குச் செயப்படுபொருளாக வந்தது (அதாவது, அது அவன் என்னத்தைக் கேட்டான் என விளக்குகிறது). **εἰη** எனும் வியங்கோள் வினை தன்னில் தானே ஐயப்பாட்டினைக் குறிக்குமாயினும், ஐயப்பாட்டுப் பொருளில் வரும் **ἀν** எனும் இடைச்சொல் கூட வரலாம். லூக்கா எழுதிய நூல்களில் இத்தகைய தொடர்கள் அடிக்கடி வருகின்றன (எ–கா : லூக்கா 18[36]).

## (எ) குறுகிய வினைகள்

நாம் ஏற்கெனவே பகுதி ஈற்றில் ε கொண்ட குறுகிய வினைகளைப் படித்துள்ளோம் (பக். 26 காண்க). அவற்றிற்கு **φιλεω** வாய்பாடாகக் கொள்ளப்படுகிறது. குறுகிய வினைகளில் இன்னும் இரண்டு வகைகள் உண்டு. அவை பகுதி ஈற்றில் **α** கொண்டவையும் **ο** கொண்டவையுமே. அவற்றிற்கு முறையே **τιμαω** (= கனப்படுத்துகிறேன்) என்பதும் **φανεροω** (= வெளிப்படுத்துகிறேன்) என்பதும் வாய்பாடுகள் ஆகும். அவற்றின் பகுதிகளுடன் விகுதி சேரும்போது, கீழ்க்காணும் விதிகளின்படி விகாரப் புணர்ச்சி ஏற்படும் :

1. பகுதி ஈற்றில் α கொண்டவை :

| | |
|---|---|
| **α + ο** அல்லது **ω** கொண்ட யாவும் = ω | எ–கா : **ἐτιμα + ον = ἐτιμων** |
| α + வேறு எதுவும் = α | எ–கா : **τιμα + ετε = τιματε** |
| விகுதியில் ι வரின், அடியில் சேரும் | எ–கா : **τιμα + ει = τιμᾳ** |

2. பகுதி ஈற்றில் ο கொண்டவை :

| | |
|---|---|
| ο + குறில், அல்லது ου = ου | எ–கா : **φανερο + ουσι = φανερουσι** |
| ο + நெடில் = ω | எ–கா : **φανερο + ητε = φανερωτε** |
| ο + ι கொண்ட எதுவும் = οι | எ–கா : **φανερο + ῃ = φανεροι** |

மேற்கண்ட விதிகளை அடிப்படையாகக் கொண்டு மாணவர் தாங்களே இவ்விருவகைக் குறுகிய வினைகளில் நிகழ்காலத்தில் வரும் எல்லா வினைப் பாங்குகளையும் அறிந்துகொள்ளலாம்.* செய்வினை நிகழ்கால வினை எச்சங்கள் மட்டும் விதி விலக்காக உருவெடுக்கும். அவை **φανερουν** என்பதும் **τιμαν** என்பதும் ஆகும் (ειν எனும் வினை எச்ச விகுதியில் வந்த ι–உயிர் இவற்றில் இடம் பெறவில்லை எனக் காண்க).

இவ்வினைகளின் ஏனைய காலங்கள் பின்வருமாறு உருவெடுக்கும் :

**[φιλεω φιλησω ἐφιλησα πεφιληκα πεφιλημαι ἐφιληθην]**
**τιμαω τιμησω ἐτιμησα τετιμηκα τετιμημαι ἐτιμηθην**
**φανεροω φανερωσω εφανερωσα πεφανερωκα πεφανερωμαι ἐφανερωθην**

இவற்றில் காலத்தைக் காட்டும் இடைநிலைக்குமுன் பகுதி ஈற்று உயிர் நெடிலாயிற்று என்பது கவனிக்கத் தக்கது.

---

பயிற்சி 29, பக். 116 காண்க.

## (ஏ) முதல்நிலையில் μι எனும் விகுதி கொண்ட வினைகள்

நாம் இதுவரையிலும் படித்துள்ள வினைகள் பெரும்பாலும் முதல் நிலையில் ω விகுதியைப் பெறுவனவாம். முதல்நிலையில் **μι** விகுதியைப் பெறுபவற்றுள் **ειμι** என்பதை மட்டும் கண்டோம் (பக். 63 காண்க). இந்த வகையைச் சேர்ந்தவை சிலவாயினும், அவை மிக்க முக்கிய மானவை. அவற்றுள் புதிய ஏற்பாட்டில் அடிக்கடி வருபவை, **τιθημι** (= வைக்கிறேன்) **διδωμι** (= கொடுக்கிறேன்) **ἱστημι** (= நிறுத்துகிறேன்) என்பவையே. அவற்றைக் குறித்துக் கீழ்க்காணும் செய்திகள் கவனிக்கத் தக்கவை :

1. செய்வினை செயப்பாட்டுவினை நிகழ்காலத்தில், அவை ஒரு தனி வகையான விகுதிகளைப் பெறும் (அவற்றின் நிகழ்காலம் 136–140–ஆம் பக்கங்களில் விவரித்துக் காட்டப்படும்).

2. செய்வினை செயப்பாட்டுவினை நிகழ்காலத்தில், பகுதியின் முதல் எழுத்து இரட்டிக்கும். மற்றக் காலங்களில் அது அப்படி இரட்டிக்காது.

---

* இவ்வினைகளில் விகாரப் புணர்ச்சி ஏற்படும் எல்லா வினைப் பாங்குகளும் 133–135–ஆம் பக்கங்களில் விவரித்துக் காட்டப்படும்.

எ—கா :

| | | | |
|---|---|---|---|
| διδωμι — δι இரட்டித்தல், | δο வினைப்பகுதி, | μι விகுதி |
| ἵστημι — ἱ இரட்டித்தல்; | στα வினைப்பகுதி, | μι விகுதி |
| τιθημι — τι இரட்டித்தல், | θε வினைப்பகுதி, | μι விகுதி |

τιθημι என்பதில், பகுது முதலில் நிற்கிற θ மெய் τι-ஆக இரட்டித்தது (பக். 32 காண்க). ἵστημι எனபதில், பகுதி முதலில் நிற்கிற σ மெய்க்கு ἱ என்பது இரட்டுதலாக வந்தது எனக் காண்க. இது தனிப்பட்ட வகையான இரட்டித்தல் எனலாம்.

செய்வினை நிகழ்காலத்தில், வினைப்பகுதியில் வந்த உயிர் நெடிலாயிற்று எனக் காண்க (δο → δω, στα → στη, θε → θη). செயப்பாட்டு வினை நிகழ்காலத்திலோ அந்த விகாரம் ஏற்படவில்லை (**διδ<u>ο</u>μαι, ἵστ<u>α</u>μαι, τιθ<u>ε</u>μαι**).

3. இறந்த காலத் தனிப்பு : **τιθημι διδωμι** என்பவற்றின் செய்வினை இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு முதலாம் இறந்த காலத் தனிப்பைப்போல விகுதிகளைப் பெறும் (**ἔθηκα, ἔθηκας** முதலியன ; **ἔδωκα, ἔδωκας** முதலியன). அவற்றின் மற்ற வினைப் பாங்குகளோ இரண்டாம் வகையான இறந்த காலத் தனிப்பைச் சேர்ந்தவை. அவ்விரண்டு வினைகளிலும் தற்பொருட்டு வினை 2—ஆம் இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கும் உண்டு. அதற்கும் செய்வினை இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்குக்கும் இடையே பொருள் வேறுபாடு இல்லை. இவற்றின் விவரங்கள் யாவற்றையும் கீழே காணலாம் (பக். 136–140).

4. இம் மூன்று வினைகளின் முக்கியக் கால மாற்றங்கள் பின்வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| διδωμι | δωσω | ἔδωκα | δεδωκα | δεδομαι | ἐδοθην |
| τιθημι | θησω | ἔθηκα | τεθεικα | τεθειμαι | ἐτεθην |
| ἵστημι | στησω | ἔστησα / εστην | ἕστηκα | — | ἐσταθην |

இவற்றை அடிப்படையாகக் கொண்டு மாணவர் தாங்களே இவ்வினைகளின் ஏனைய காலங்களையும் வினைப் பாங்குகளையும் அறிந்துகொள்ளலாம்.

5. ἵστημι : இதன் பொருள் நிறுத்துகிறேன் என்பது. எனினும் செய்வினையிலும் சில காலங்களில் அது செயப்படுபொருள் குன்றிய வினையாக மாறுகிறது.

செய்வினையில் கீழ்க்காணும் காலங்கள் செயப்படுபொருள் குன்றா தவை :

ἵστημι = நிறுத்துகிறேன் (நிகழ்காலம்)
στησω = நிறுத்துவேன் (எதிர்காலம்)
ἐστησα = நிறுத்தினேன் (1–ஆம் இ. கா. தனிப்பு)

செய்வினையில் கீழ்க்காணும் காலங்கள் செயப்படுபொருள் குன்றியவை :

ἐστην = நின்றேன் (2–ஆம் இ. கா. தனிப்பு)
ἑστηκα = நின்றுகொண்டிருக்கிறேன் (நிகழ்கால நிறைவு)
εἱστηκειν = நின்றுகொண்டிருந்தேன் (இறந்த கால நிறைவு)

தற்பொருட்டு வினையிலும் செயப்பாட்டு வினையிலும் எல்லாக் காலங்களும் செயப்படுபொருள் குன்றியவையே.

எ–கா :

ἐσταθην = நின்றேன் (செயப்பாட்டு வினை இ. கா. தனிப்பு)

6. ἵημι : இந்த வினை ஒரு முன்னிடைச் சொல்லோடு பொருந்தி ஒரு கூட்டு வினையாகச் சில காலங்களிலும் வினைப்பாங்குகளிலும் வருகிறது, எ–கா : ἀφιημι (= இடம் கொடுக்கிறேன், மன்னிக்கிறேன்), συνιημι (= புரிந்துகொள்ளுகிறேன்). அதன் முக்கியக் கால மாற்றங்களாவன :

ἵημι ἥσω ἧκα — [ἑωνται] ἑθην

செயப்பாட்டு வினை நிகழ்கால நிறைவில் சாற்றுப் பாங்குப் படர்க்கைப் பன்மை மட்டும் புதிய ஏற்பாட்டில் வருகிறது. செய்வினை 2–ஆம் இறந்த காலத் தனிப்பில் சில வினைப் பாங்குகள் புதிய ஏற்பாட்டில் வருகின்றன :

சார்புநிலைப் பாங்கு : ὡ, ἧς, ἧ, ὡμεν, ἧτε, ὡσι(ν)
ஏவல் பாங்கு : ἕς, ἕτε (முன்னிலை ஒருமை, பன்மை)
பெயரெச்சம் : εἱς, εἱσα, ἑν (ἑντα முதலியன)

7. φημι (= சொல்லுகிறேன்) : இதில் புதிய ஏற்பாட்டில் காணப்படுகிற கூறுபாடுகளாவன :

φησι(ν) = சொல்லுகிறான் (நி. கா. சா. பா. படர்க்கை ஒருமை)
φασι(ν) = சொல்லுகிறார்கள் ( ,, ,, படர்க்கைப் பன்மை)
ἐφη = சொன்னான் (இ. கா. தொடர்ச்சி படர்க்கை ஒருமை)

---

பயிற்சி 30, பக். 117 காண்க.

# அதிகாரம் 6

## தொடரியல் (Syntax)

### (அ) இணைப்பிடைச்சொற்கள் (Conjunctions)

இணைப்பிடைச்சொல் என்பது இரண்டு தனிச் சொற்களையோ இரண்டு கிளவியங்களையோ இரண்டு வாக்கியங்களையோ இணைக்கும் ஒரு சொல். கீழ்க்காணும் இணைப்பிடைச்சொற்கள் இரு வாக்கியங்களை இணைக்க வழங்கப் பெறும்:

1. ἀλλα ( =ஆனால்) :

*ὑδωρ ἐζητησεν, ἀλλα ευρειν ουκ ἐδυνατο*
தண்ணீரைத் தேடினான், ஆனால் கண்டுபிடிக்க முடியவில்லை

*μη ἀγαπωμεν λογῳ, ἀλλα ἐν ἐργῳ*
சொல்லளவில் அன்று, செயலளவிலேயே அன்பு கூருவோமாக

சோல்லளவில் இந்த இரண்டாம் வாக்கியம், "சொல்லில் அன்பு கூராதிருப்போமாக, ஆனால் செயலில் (அன்பு கூருவோமாக)" என்று மொழி பெயர்க்கப்படலாம். ஆயினும் **ἀλλα** ஒரு எதிர்மறைச் சொல் லுக்குப்பின் வரும்போது, அது உணர்த்தும் வேறுபாட்டை "ஆனால்" என்பதனால் அன்று, ஓர் ஏகார இடைச்சொல்லால் மொழிபெயர்ப்பதே போருந்தும். வருமொழி முதலில் உயிர் வரின், **ἀλλα** என்பதின் ஈற்று உயிர் கெடலாம் (எ-கா : மேலே உள்ளதை "**ἀλλ' ἐν ἐργῳ**" என்று எழுதலாம்).

2. **δε** ( =ஆனால்) : இச்சொல் **ἀλλα** என்பதைப்போல ஒரு வேறு பாட்டை உணர்த்தலாம். ஆனால் **ἀλλα** என்பதை விட இது குறைந்த வலிமையுடையது. சில சமயங்களில் அதனை ஓர் ஓகார இடைச்சொல் லைக் கொண்டு மொழிபெயர்த்தால் போதும். வேறு சில சமயங்களில் அது και என்பதைப் போல வேறுபாட்டை உணர்த்தாமல் இரண்டு வாக்கியங்களைத் தொடர்ச்சியாக இணைக்கிறது (கீழே காண்க).

*ὁ πατηρ ἀπηλθεν, τα δε τεκνα ἐν τῃ οἰκιᾳ ἐμεινεν*
தந்தை புறப்பட்டுப் போனான், பிள்ளைகளோ வீட்டில் இருந்தார்கள்

**δε** எனும் சொல், ஒரு வாக்கியத்தின் முதற்சொல்லாக வராது. வருமொழி முதலில் உயிர் வரின், அது **δ'** என்பதாக எழுதப்படலாம்.

3. *γαρ* (= ஏனெனில்): இதுவும் வாக்கியத்தின் முதலில் வராது.

> **το φως μισουσιν, τα γαρ ἐργα αὐτων πονηρα**
> (அவர்கள்) ஒளியைப் பகைக்கிறார்கள், ஏனெனில் அவர்களுடைய செயல்கள் பொல்லாதவை

4. **οὐν** (= ஆகையால்): இச்சொல்லும் வாக்கியத்தின் முதலில் வராது.

> **τα ἐργα αὐτων πονηρα ἐστιν, μισουσιν οὐν το φως**
> அவர்கள் செயல்கள் பொல்லாதவை, ஆகையால் ஒளியைப் பகைக்கிறார்கள்

5. *και*: இந்தச் சொல் இரண்டு வாக்கியங்களை இணைக்க வழங்கப் பெறும்பொது, அது "மேலும்" என மொழிபெயர்க்கப்படலாம்.

எ–கா: **ἐκεινος ψευστης ἐστιν, και ἐν αὐτῳ ἡ ἀληθεια οὐκ ἐστιν**
அவன் பொய்யன், (மேலும்) அவனிடம் உண்மை இல்லை

**και** என்பது இவ்வாறு வரும்போது, அதனைப் பொருத்தமாக மொழி பெயர்க்க முடியாவிடில், அதனை மொழிபெயர்க்காமல் விட்டுவிட வேண்டும்.

**και** என்பது இரண்டு தனிச் சொற்களையும் இணைக்க வழங்கப் பெற லாம்.

எ–கா: **ὁ κοσμος και ἡ ἐπιθυμια αὐτου παραγεται**
உலகமும் அதற்குரிய ஆசையும் ஒழிந்து போகின்றன
**πιστος ἐστι και δικαιος**
(அவர்) உண்மையுள்ளவரும் நீதியுள்ளவருமாய் இருக்கிறார் (அல்லது, அவர் உண்மையும் நீதியு முள்ளவராய் இருக்கிறார்)

முதல் வாக்கியத்தில் **και** என்பது **κοσμος**, **ἐπιθυμια** ஆகிய இரண்டு பெயர்களையும், இரண்டாம் வாக்கியத்தில் **πιστος**, **δικαιος** ஆகிய இரண்டு பெயரடைகளையும் இணைக்கிறது. இரண்டு வாக்கியங்களிலும் "உம்" எனும் இடைச்சொல்லைக் கொண்டு அதனை மொழிபெயர்க்கலாம்.

> **και οἱ ἁγιοι ἁμαρτανουσιν**
> பரிசுத்தவான்களும் பாவம் செய்கிறார்கள்

இங்கே **και** ஓர் இணைப்பாக வரவில்லை. இந்த வாக்கியத்தில், கிரேக் கத்தில் **και** என்பதும் தமிழில் உம் என்பதும், நீங்கள் பரிசுத்தவான் கள் பாவம் செய்ய மாட்டார்கள் என எதிர்பார்க்கலாம், அயின் அவர் களும் மற்ற மனிதர்களைப் போல அப்படிச் செய்கிறார்கள் என்கிற பொருளை உணர்த்துகின்றன. தமிழ் இலக்கணப்படி இதன் பெயர் "உயர்வுச் சிறப்பு உம்மை" என்பது.

இத்தகைய இணைப்பிடைச்சொற்கள் கிரேக்க உரைநடையில் மிக்க சாதாரணமாக வரும். அடிக்கடி அவற்றில் சிறந்த பொருளும் இருக்கும். ஆகவே மாணவர் அவற்றைக் கவனித்துக் கூடிய மட்டும் பொருத்தமான முறையில் தமிழில் மொழிபெயர்த்தல் வேண்டும். சில சமயங்களில் அவற்றைப் பொருத்தமாக மொழிபெயர்க்க முடியாமலிருக்கலாம். அப்போது தமிழ் நடையைக் கெடுப்பதை விட, அவற்றை மொழிபெயர்க்காமல் விட்டுவிடுவது நல்லது.

ஒரு சார்புக் கிளவியத்தைத் தலைமைக் கிளவியத்தோடு இணைக்கும் சில இணைப்பிடைச்சொற்களை நாம் ஏற்கெனவே படித்துள்ளோம் (எ–கா: ἱνα—நோக்கப் பொருள், பக். 69, 70; ει—நிபந்தனைப் பொருள், பக். 70; ὁτε, ἑως—காலப் பொருள், பக். 70). அவற்றைப் போன்ற இன்னும் மூன்று இணைப்பிடைச்சொற்களை இங்குக் கவனிப்போம்.

1. **καθως**: இது ஒப்பீட்டுப் பொருளைத் தரும் சார்புக் கிளவியம் ஒன்றைத் தலைமைக் கிளவியத்தோடு இணைக்கும்.

எ–கா: **καθως ἐκεινος ἐστιν ἁγνος, ἡμας ἁγνους εἰναι δει**
அவர் தூய்மையாயிருக்கிறதுபோல், நாம் தூய்மையாயிருத்தல் வேண்டும்

இவ்வாக்கியத்தில் **καθως . . . ἁγνος** என்பது ஒரு ஒப்பீட்டுக் கிளவியம். அதில் வந்த வினை (ἐστιν) சார்பு நிலைப் பாங்கில் அன்று, சாற்றுப் பாங்கிலேயே நிற்கிறது. ஏனெனில் அது சந்தேகத்திற்குரியதும் அன்று, எதிர்காலத்தைக் குறிக்கிறதும் அன்று.

2. **ὁτι**: இது காரணப் பொருளைத் தரும் சார்புக் கிளவியம் ஒன்றைத் தலைமைக் கிளவியத்தோடு இணைக்கும்.

எ–கா: **ὑμιν ταυτα γραφω, ὁτι ἐγνωκατε τον πατερα**
நீங்கள் பிதாவை அறிந்திருக்கிறபடியால், இவற்றை உங்களுக்கு எழுதுகிறேன்

இங்கே **ὁτι . . . πατερα** என்பது ஒரு காரணக் கிளவியம். அதிலும் ஐயப்பாடு இல்லை ஆதலால், அதன் வினை சாற்றுப் பாங்கில் வந்தது (**ἐγνωκατε**). **ὁτι** என்பது தரும் ஏனைய பொருட்களை 82, 86–ஆம் பக்கங்களில் காணலாம்.

3. **ὡστε**: இது விளைவுப் பொருளைத் தரும் சார்புக் கிளவியம் ஒன்றைத் தலைமைக் கிளவியத்தோடு இணைக்கும். **ὡστε** என்பதைத் தழுவி நிற்கும் விளைவுக் கிளவியத்தின் வினை எப்போதும் சாற்றுப்

பாங்கில் வராது. சில சமயம் அந்தக் இளவியம் ஒரு செயப்படுபொருள் வேற்றுமை வினையெச்சத் தொடராக அமையும் (பக். 83 காண்க).

எ–கா : *ὁ ἀσθενης ἐγερθεις περιεπατει, ὡστε παντας θαυμαζειν*
எல்லாரும் ஆச்சரியப்படும்வகையில், சப்பாணி எழுந்து நடந்தான்

---

பயிற்சி 31, பக். 117 காண்க.

## (ஆ) கேள்விகள்

கிரேக்கத்தில் நான்கு விதங்களில் கேள்வி கேட்கலாம்.

**1.** ஒரு வாக்கியத்தின் இறுதியில் முற்றுப் புள்ளிக்குப் பதிலாக ஒரு கேள்விக் குறியை வைத்தால், அந்த வாக்கியம் ஒரு கேள்வியாக மாறிவிடும்.

எ–கா : **οὑτος ἐστιν ὁ Χριστος.**
இவர்தான் கிறிஸ்து.
**οὑτος ἐστιν ὁ Χριστος ;**
இவர் கிறிஸ்துவா ?

**2.** ஒருவன், தான் கேட்கிற கேள்விக்கு உடன்பாடான விடை தரப்படும் என எதிர்பார்த்துத் தன் கேள்வியை உடன்பாடாகக் கேட்கும் போது, அக்கேள்வியின் முதலில் **οὐ** (அல்லது **οὐχι**) எனும் எதிர்மறை இடைச்சொல் வரும்.

எ–கா : **οὐχι οὑτος ἐστιν ὁ Χριστος;**
இவர்தான் கிறிஸ்து, அல்லவா ? (ஆம், இவர்தான்)

**3.** ஒருவன், தான் கேட்கிற கேள்விக்கு எதிர்மறையான விடை தரப்படும் என எதிர்பார்த்துத் தன் கேள்வியை எதிர்மறையாகக் கேட்கும்போது, அக்கேள்வியின் முதலில் **μη** (அல்லது **μητι**) எனும் எதிர்மறை இடைச்சொல் வரும்.

எ–கா : **μητι οὑτος ἐστιν ὁ Χριστος;**
இவர் கிறிஸ்து அல்லர், அல்லவா ? (ஆம், இவர் அல்லர்)

**4.** ஒரு வினாச் சொல்லைக் கொண்டும் ஒரு கேள்வியைக் கேட்கலாம். **τίς, τί** எனும் வினாப் பதிற்பெயரை நாம் முன்னர்ப் பார்த்தோம்

(பக். 50). கீழ்க்காணும் வினா வினையடைகளும் (**interrogative adverbs**) அடிக்கடி வரும்:

$\pi o \upsilon$ = எங்கே
$\pi o \tau \epsilon$ = எப்போது
$\pi \omega \varsigma$ = எப்படி
$\left.\begin{matrix} \tau \acute{\iota} \\ \delta \iota \alpha\ \tau \acute{\iota} \end{matrix}\right\}$ = ஏன்

எ–கா: που ἐστιν ἐκεινος; = அவர் எங்கே இருக்கிறார்?
ποτε ταυτα ἐσται; = இவை எப்போது நடைபெறும்?

---

பயிற்சி 32, பக். 118 காண்க.

## (இ) ஐயல் கூற்று (Indirect Speech)

நேர்க் கூற்றில் (**direct speech**), ஒருவன் சொல்லிய வார்த்தைகள் சொல்லப்பட்டபடியே வருகின்றன. அதில் மேற்கோள் குறிகளும் பொதுவாகப் பயன்படுத்தப்படும்.

எ–கா: அவன், "நான் சுகவீனமாயிருக்கிறேன்" என்று கூறினான்
அவன், "நீங்கள் எங்கே தங்கியிருக்கிறீர்கள்?" என்று கேட்டான்
அவன் "நீ போ" என்று கட்டளையிட்டான்

மேற்கண்ட மூன்று வாக்கியங்களில், முதலாம் வாக்கியத்தில் நேர்ச் சாற்றும் (**direct statement**) இரண்டாம் வாக்கியத்தில் நேர் வினாவும் (**direct question**) மூன்றாம் வாக்கியத்தில் நேர்க் கட்டளையும் (**direct command**) வந்தன. இம்மூன்றும் நேர்க் கூற்றில் வரும் மூன்று வகைகளாம்.

ஐயல் கூற்றில், ஒருவன் சொல்லிய வார்த்தைகள் சொல்லப்பட்டபடியே வரா. சொல்லப்பட்ட பொருள் மட்டும் சற்று வேறுபட்ட உருவத்தில் மேற்கோள் குறிகளின்றி வரும்.

எ–கா: அவன் தான் சுகவீனமாயிருந்ததாகக் கூறினான்
அவன் அவர்கள் எங்கே தங்கியிருந்தார்கள் என்று கேட்டான்
அவன் அவனைப் போகச் சொன்னான்

சாற்று, வினா, கட்டளை ஆகிய அந்த மூன்று வகைகளும் ஐயல் கூற்றிலும் உண்டு எனக் காண்க. அம்மூன்றில், ஐயல் கட்டளை 61, 70–ஆம் பக்கங்களிலும் விளக்கப்பட்டது; ஒரு வகையான ஐயல் வினாவையும் நாம் மேலே பார்த்தோம் (பக். 73); வேறொரு வகையைக் கீழே காண்போம் (பக். 84).

1. <u>நேர்ச் சாற்று</u>

நாம் ஐயல் சாற்றினைப் படிக்குமுன், கிரேக்கத்தில் நேர்ச் சாற்று எவ்வாறு வருகிறது எனக் கவனிக்க வேண்டும்.

எ–கா : அவர்கள், "நீங்கள் வருவீர்கள்" என்று கூறினார்கள்
*εἶπον ὅτι 'Υμεις ἐλευσεσθε*
அவன், "நான் சுகவீனமாயிருக்கிறேன்" என்று கூறினான்
*εἶπεν (ὅτι) 'Εγω ἀσθενης εἰμι*

நேர்ச் சாற்றில் *ὅτι* எனும் இணைப்பிடைச்சொல் வரலாம், வராமலும் இருக்கலாம். கிரேக்க நூல்களில் பொதுவாக மேற்கோள் குறிகள் நேர்க் கூற்றில் பயன்படுத்தப்படா, எனினும் நேர்க் கூற்றில் வந்த முதல் சொல்லின் முதல் எழுத்து பேருருவத்தில் எழுதப்படும்.

2. <u>ஐயல் சாற்று</u>

அவர்கள் [நீங்கள் வருவதாகக்] கூறினார்கள்
அவன் [தான் சுகவீனமாயிருந்ததாகக்] கூறினான்

மேற்கண்ட வாக்கியங்களில் அடைப்புக் கோடுகளுக்குள் அடங்கிய இரு தொடர்களும் ஐயல் சாற்றுக்கள் ஆகும். அவை கூறினார்கள், கூறினான் எனும் வினைகளுக்குச் செயப்படுபொருளாக நிற்கும் பெயர்க் கிளவியங்களாகக் கருதப்படும். மேற்கோள் குறிகள் பயன்படுத்தப் படவில்லை. அதனோடு இரண்டாம் வாக்கியத்தில் ஐயல் சாற்றின் எழுவாய் படர்க்கையாக மாறியிருக்கிறது (நான் → தான்); ஐயல் சாற்றில் வந்த வினையின் காலமும் மாறியிருக்கிறது (இருக்கிறேன் → இருந்ததாக). கிரேக்கத்தில் இத்தகைய கிளவியங்களை இரண்டு முறைகளில் மொழி பெயர்க்கலாம்.

(i) *ὅτι* எனும் இணைப்பிடைச்சொல்

*εἶπον ὅτι ὑμεις ἐλευσεσθε*
*εἶπεν ὅτι ἀσθενης ἐστιν*

இந்த வாக்கியங்களில் நான்கு காரியங்களைக் கவனிக்க வேண்டும் :

1. ஐயல் சாற்றின் முதல் எழுத்துப் பேருருவத்தில் வரவில்லை.
2. *ὅτι* எனும் இணைப்பிடைச்சொல் வந்தது.
3. இரண்டாம் வாக்கியத்தில், நேர்ச் சாற்றில் தன்மையில் வந்த எழுவாய் ஐயல் சாற்றில் (அது தோன்றவில்லையாயினும்) படர்க்கையாக மாறியிருக்கிறது (*ἐστιν*).

4. ஐயல் சாற்றில் வந்த வினைகள் இன்னும் சாற்றுப் பாங்கில் உள்ளன. மேலும் அவற்றின் காலம் மாற வில்லை. நேர்ச் சாற்றில் ஒரு வினை எந்தக் காலத்தில் வந்ததோ, அதே காலத்தில் அது ஐயல் சாற்றிலும் வர வேண்டும் என்பது விதி (*ἐλευσεσθε; εἰμι—ἐστιν*).

(ii) செயப்படுபொருள் வேற்றுமை வினையெச்சத் தொடர் (accusative and infinitive)

*εἰπον ὑμας ἐλευσεσθαι*

இங்கு நான்கு காரியங்களைக் கவனிக்க வேண்டும்:

1. *ὁτι* என்பதும் வேறொரு இணைப்பும் வரவில்லை.
2. ஐயல் சாற்றின் எழுவாய் (நீங்கள்) செயப்படுபொருள் வேற்றுமையில் வந்தது (*ὑμας*).
3. ஐயல் சாற்றிலுள்ள வினை (வருவதாக) செய்ய எனும் வாய்பாட்டு வினையெச்சமாக வந்தது (*ἐλευσεσθαι*).
4. ஆயினும் அவ்வினையின் காலம் மாறவில்லை. நேர்க் கூற்றில் அது எதிர்காலத்தில் இருந்தது, இங்கேயும் அப்படித்தான்.

*εἰπεν ἀσθενης εἰναι*

இந்த வாக்கியத்தில், தலைமைக் கிளவியத்தின் எழுவாயும் (அவன்) ஐயல் சாற்றின் எழுவாயும் (தான்) ஒரே ஆளைக் குறிக்கின்றன. அதனால் இங்குச் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன.

1. ஐயல் சாற்றின் எழுவாய் (தான்) வெளிப்படையாய் வரவில்லை.
2. அது வந்திருப்பின், அது செயப்படுபொருள் வேற்றுமை யில் அன்று, எழுவாய் வேற்றுமையில் இருந்திருக்கும். ஆகவே அதனோடு இசைந்து நிற்கும் பெயரடை (*ἀσθενης*) எழுவாய் வேற்றுமையில் வந்தது. அதனால் இந்தத் தொடருக்கு, எழுவாய் வேற்றுமை வினையெச்சத் தொடர் என்று பெயர்.

கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளும் இக்காரியங்களை விளக்குவன வாகும்:

*λεγομεν ὁτι ἀγαθοι ἐσμεν*

*λεγομεν ἀγαθοι εἰναι*

நம்மை நல்லவர்களாகக் கூறிக் கொள்ளுகிறோம்

*λεγομεν ὅτι ἐκεινοι ἀγαθοι εἰσιν*
*λεγομεν αὐτους ἀγαθους εἰναι*
நாம் அவர்களை நல்லவர்களாகக் கூறுகிறோம்
*εἰπον ὅτι ἐν ἐκεινῃ τῃ οἰκιᾳ μενουσιν*
*εἰπον ἐν ἐκεινῃ τῃ οἰκιᾳ μενειν*
அவர்கள் தாங்கள் அந்த வீட்டில் தங்கியிருந்ததாகக் கூறினார்கள்
*εἰπον ὅτι ἤδη ἀπεθανεν*
*εἰπον αὐτον ἤδη ἀποθανειν*
அவர்கள் அவன் ஏற்கெனவே இறந்து போய்விட்டான் என்று கூறினார்கள்

3. <u>ஐயல் வினா</u>

*ἐπυνθανοντο τίς ἐστιν οὗτος*
அவர்கள் இவன் யார் எனக் கேட்டனர்

இங்கே *τίς ἐστιν οὗτος* என்பது ஐயல் வினா; அது *ἐπυνθανοντο* என்பதற்குச் செயப்படுபொருளாக நிற்கிற ஒரு பெயர்க் கிளவியம். நேர்க் கூற்றில் அதன் வினை நிகழ் காலத்தில் வந்திருக்கும், ஆதலால் ஐயல் கூற்றிலும் அது அவ்வாறே வந்தது (*ἐστιν*). நேர்க் கூற்றிலும் வந்திருக்கும் *τίς* எனும் வினாப் பதிற்பெயரைத் தவிர, வேறொரு இணைப்பிடைச்சொல்லோ வினாச் சொல்லோ வரவில்லை.

*ἐπυνθανετο εἰ ἤδη ἀπεθανεν*
அவர் அவன் ஏற்கெனவே இறந்துபோய்விட்டானா என்று கேட்டார்

இங்குக் காணப்படுகின்ற ஐயல் வினா (*εἰ ἤδη ἀπεθανεν*) நேர்க் கூற்றில் "*ἤδη ἀπεθανεν;*" என்பதாக வந்திருக்கும். அதில் வினாச் சொல் இல்லாததால், ஐயல் கூற்றில் அது வினாவேதான் எனத் தெரிவிக்கும்படி *εἰ* என்பது வினா இணைப்பிடைச்சொல்லாக வந்தது.

இன்னும் இரண்டு எடுத்துக்காட்டுகளைக் கீழே காண்க :

*εἰπε μοι που ἦλθες*
நீ எங்கே போனாய் என்று என்னிடம் சொல்
*εἰπε τί ποιωμεν*
நாம் என்ன செய்ய வேண்டும் என்று சொல்

(நேர்க் கூற்றில் ஆய்தற் சார்புநிலைப் பாங்கு இவ்வினாவில் வந்திருப்பதால் (*ποιωμεν*, பக். 71 காண்க), ஐயல் கூற்றிலும் சார்புநிலைப் பாங்கு வந்தது எனக் காண்க).

---

பயிற்சி 33, பக். 119 காண்க.

## (ஈ) தழுவியல் கிளவியங்கள் (Relative Clauses)

நல்ல மனிதன் = ἀγαθος ἀνθρωπος

மேற்கண்ட தொடரில் 'நல்ல' எனும் குறிப்புப் பெயரெச்சம் 'மனிதன்' எனும் பெயரைத் தழுவி நிற்கிறது. கிரேக்கத்தில் அந்தப் பெயரெச்சம் ஒரு பெயரடையாக வந்தது (ἀγαθος).

உண்மையான வார்த்தை = ἀληθινος λογος

இந்தத் தொடரில் 'ஆன' எனும் உருபு 'உண்மை' எனும் பண்புப் பெயரை 'வார்த்தை' எனும் பெயருடன் இணைக்கிறது. அந்தப் பண்புப் பெயரும் அதன் உருபும் கிரேக்கத்தில் ஒரு பெயரடையாக வந்தது (ἀληθινος).

என்னைப் பார்த்த மனிதன் . . .
நான் பார்த்த பெண் . . .

இந்த இரண்டு தொடர்களிலும் 'பார்த்த' எனும் தெரிநிலைப் பெயரெச்சம் ஒரு பெயரைத் தழுவி நிற்கிறது (மனிதன், பெண்). அந்தப் பெயரெச்சத்திற்கு முதல் தொடரில் ஒரு தனிச் செயப்படு பொருளும் (என்னை), இரண்டாம் தொடரில் ஒரு தனி எழுவாயும் (நான்) உண்டு. இத்தகைய தெரிநிலைப் பெயரெச்சத் தொடர்கள் கிரேக்கத்தில் தழுவியல் கிளவியங்களாக மொழிபெயர்க்கப்படும்.

ஒரு கிரேக்கத் தழுவியல் கிளவியத்தில், தமிழில் தெரிநிலைப் பெயரெச்சமாக வந்த ஒரே சொல், ஒரு தழுவியல் பதிற்பெயர் ஒரு வினை முற்று ஆகிய இரு சொற்களாக வரும். ஒரு தழுவியல் கிளவியம் தழுவி நிற்கும் பெயர் அதன் முன்னிற்பு (antecedent) எனப்படும் (மேற்கண்ட எடுத்துக் காட்டுக்களில் மனிதன், பெண் என்பவையே முன்னிற்புகள்).

கிரேக்கத்தில் கீழ்க்காணும் இரண்டு தழுவியல் பதிற்பெயர்கள் உண்டு. புதிய எற்பாட்டைப் பொறுத்தமட்டில், அவற்றிற்கிடையே பொருள் வேறுபாடு இல்லை.

| | ஒருமை | | | பன்மை | | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண். | பெண். | அலிப். | ஆண். | பெண். | அலிப். |
| எழுவாய் வேற். | ὅς | ἥ | ὅ | οἵ | αἵ | ἅ |
| செயப். வேற். | ὅν | ἥν | ὅ | οὕς | ἅς | ἅ |
| உடைமைப். வேற். | οὗ | ἧς | οὗ | ὧν | ὧν | ὧν |
| கொடைப். வேற். | ᾧ | ᾗ | ᾧ | οἷς | αἷς | οἷς |

இதுவும் ἐκεινος என்பது பெறும் வேற்றுமை உருபு வரிசையும் ஒன்று தான். இதில் முதலில் நிற்கும் உயிரின்மீது வந்த வன்மூச் சொலிக்குறி இதன் பகுதியைப் போலக் காணப்படுகிறது. ἡ ὁ οἱ αἱ

ஆகிய சொற்கள் இந்தத் தழுவியல் பதிற்பெயரிலும் சிறப்புச் சுட்டிலும் வரும். ஆகவே அவற்றை வேறுபடுத்திக் காட்டும்படி, அவை தழுவியல் பதிற்பெயராக வரும்போது, அவை ἥ ὅ οἵ αἵ என்பதாக ஒலியழுத்தக் குறியுடன் எழுதப்படும்; அவை சிறப்புச் சுட்டாக வரும்போது, ஒலி யழுத்தக் குறியின்றி எழுதப்படும்.

| | ஒருமை | | | பன்மை | | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண். | பெண். | அலிப். | ஆண். | பெண். | அலிப். |
| எழுவாய் வேற். | ὅστις | ἥτις | ὅτι | οἵτινες | αἵτινες | ἅτινα |
| செயப். வேற். | ὅντινα | ἥντινα | ὅτι | οὕστινας | ἅστινας | ἅτινα |
| உடைமைப்.வேற். | οὗτινος | ἧστινος | οὗτινος | ὧντινων | ὧντινων | ὧντινων |
| கொடைப். வேற். | ᾧτινι | ᾗτινι | ᾧτινι | οἷστισι (ν) | αἷστισι (ν) | οἷστισι (ν) |

இதில் ὅς எனும் தழுவியல் பதிற்பெயரும் τις எனும் பொதுநிலைப் பதிற்பெயரும் ஒரே சொல்லாகப் பொருந்தி நிற்கின்றன. இரண்டும் தங்கள் சொந்த உருபு வரிசைகளைப் பெற்று வருகின்றன எனக் காண்க.

இப்போது நாம் இந்தத் தழுவியல் பதிற்பெயர்கள் எவ்வாறு வழங்கப் பெறும் என்பதைக் கவனிப்போம்.

*என்னைப் பார்த்த மனிதன் . . .*

*ὁ ἄνθρωπος [ὃς ἐμὲ ἔβλεψεν], . . .*

அடைப்புக் கோடுகளுக்குள் அடங்கிய தொடர் தழுவியல் இளவியம் ஆகும்.

1. <u>முன்னிற்பு</u>: தமிழில் 'மனிதன்' என்பதும் கிரேக்கத்தில் 'ὁ ἄνθρωπος' என்பதும் ஒரே விதத்தில் வந்தன.

2. <u>தழுவியல் இளவியம் நிற்கும் இடம்</u>: தமிழில் ஒரு பெயரெச்சம் தான் தழுவி நிற்கும் பெயருக்குமுன் வரும்; கிரேக்கத்திலோ ஒரு தழு வியல் இளவியம் முன்னிற்புக்குப்பின் வரும்.

3. <u>தழுவியல் பதிற்பெயர்</u>: ὅς என்பது இந்தத் தழுவியல் இளவி யத்தை முன்னிற்புடன் இணைக்கிறது. முன்னிற்பு எந்தப் பாலிலும் என்ணிலும் இருக்கிறதோ (இங்கே, ἄνθρωπος—ஆண்பால், ஒருமை), அதே பாலிலும் எண்ணிலும் அதனைத் தழுவி நிற்கும் தழுவியல் பதிற் பெயரும் இருக்கும் (ὅς—ஆண்பால், ஒருமை). தழுவியல் பதிற்பெயர் தழுவியல் இளவியத்தின் இலக்கண அமைப்பில் எந்த இடம் பெறு கிறதோ, அதற்குத் தகுந்த வேற்றுமையில் அது நிற்கும் (இங்கே ὅς என்பது ἔβλεψεν என்பதற்கு எழுவாய், ஆதலால் அது எழுவாய் வேற்றுமையில் வந்தது).

4. தழுவியல் கிளவியத்தின் வினை: தழுவியல் கிளவியத்தில் வரும் வினை பொதுவாகச் சாற்றுப் பாங்கில்தான் இருக்கும். இங்குப் 'பார்த்த' என்பது இறந்த காலம் ஆதலால், ἐβλεψεν என்பது இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கில் வந்தது. பார்த்தவன் மனிதன் என் பதால், ἐβλεψεν என்பது படர்க்கை ஒருமையில் வந்தது.

நான் பார்க்கிற பெண் . . .
ἡ γυνη [ἡν ἐγω βλεπω], . . .

அடைப்புக் கோடுகளுக்குள் அடங்கிய தொடர் ஒரு தழுவியல் கிளவியம் ஆகும் :

1. முன்னிற்பு: பெண் என்பதும் ἡ γυνη என்பதும் ஒரே விதத் தில் வந்தன.

2. தழுவியல் கிளவியம் நிற்கும் இடம்: முன்னிற்புக்குப்பின்.

3. தழுவியல் பதிற்பெயர்: முன்னிற்பு (γυνη) பெண்பால் ஒருமை ஆதலால், தழுவியல் பதிற்பெயரும் அவ்வாறும் (ἡν). அந்தத் தழுவியல் பதிற்பெயர் βλεπω என்பதற்குச் செயப்படுபொருள் ஆத லால், அது செயப்படுபொருள் வேற்றுமையில் வந்தது.

4. தழுவியல் கிளவியத்தின் வினை: பார்க்கிற என்பது நிகழ்காலம் ஆதலால், வினைச்சொல் நிகழ்காலச் சாற்றுப் பாங்கில் வந்தது. பார்த்த வன் நான் ஆதலால், அது தன்மை ஒருமையில் வந்தது (βλεπω).

தமிழ் மாணவருக்கு, தழுவியல் பதிற்பெயர் எந்த வேற்றுமையில் வர வேண்டும் எனவும் தழுவியல் கிளவியத்தின் வினை எந்தக் காலத்தி லும் இடத்திலும் வர வேண்டும் எனவும் கண்டுகொள்வது கடினமாயி ருக்கலாம். அவற்றை அறிய, எளிதான ஒரு முறை உண்டு. தமிழில் வந்த பெயரெச்சத் தொடரை ஓர் ஓகாரத்தைக் கொண்டு விரித்தால், தழுவியல் பதிற்பெயரும் அதன் வினையும் எவ்வாறு வர வேண்டும் என்த தெளிவாய் விளங்கும்.

எ–கா : (என்னைப் பார்த்த மனிதன் . . .)
எந்த மனிதன் என்னைப் பார்த்தானோ,
அந்த மனிதன் . . .
ὁ ἀνθρωπος ὁς ἐμε ἐβλεψεν, . . .

இங்கு மனிதன் எனும் முன்னிற்பு திரும்பவும் தழுவியல் கிளவியத் தில் வந்தது. அது அங்கே எந்த வேற்றுமையில் வந்ததோ, அதே வேற்றுமையில் இரேக்கத் தழுவியல் பதிற்பெயரும் வர வேண்டும். பார்த்த எனும் பெயரெச்சம் இங்கே பார்த்தான் எனும் வினை முற்றாக

மாறி வந்தது. அப்படி மாறிய வினை தமிழ்த் தொடரில் எந்தக் காலத்திலும் இடத்திலும் வந்ததோ, அதே காலத்திலும் இடத்திலும் கிரேக்கத் தழுவியல் கிளவியத்தின் வினையும் வரும்.

எ–கா : நான் பார்க்கிற பெண் . . .
நான் எந்தப் பெண்ணைப் பார்க்கிறேனோ,
அந்தப் பெண் . . .
ἡ γυνη ἡν ἐγω βλεπω, . . .

நான் உங்கள் நூலைக் கொடுத்த பிள்ளை . . .
நான் எந்தப் பிள்ளைக்கு உங்கள் நூலைக்
கொடுத்தேனோ, அந்தப் பிள்ளை . . .
το τεκνον ᾧ το βιβλιον ὑμων ἐδωκα, . . .

நீங்கள் வந்த நாள் . . .
நீங்கள் எந்த நாளில் வந்தீர்களோ,
அந்த நாள் . . .
ἡ ἡμερα ἐν ᾗ ἠλθετε, . . .

இது வரையிலும் நாம் ஒரு தமிழ்ப் பெயரெச்சத் தொடரைக் கிரேக்கத்தில் எவ்வாறு மொழிபெயர்க்கலாம் என ஆராய்ந்துள்ளோம். ஒரு கிரேக்கத் தழுவியல் கிளவியத்தைத் தமிழில் மொழிபெயர்ப்பது அத்துணைக் கடினம் அன்று. கீழ்க்காணும் முறை அநேக சமயங்களில் அதற்கு உதவியாயிருக்கும் :

ἡ γυνη ἡν ἐγω βλεπω, . . .
நான் பார்க்கிற பெண் . . .

1. முதலில், தழுவியல் பதிற்பெயரை நீக்கல் வேண்டும் (ἡν);

2. பிறகு, தழுவியல் கிளவியத்தின் வினையை (βλεπω) அதே காலத்திலுள்ள ஒரு தெரிநிலைப் பெயரெச்சமாக மாற்றி (பார்க்கிற) முன்னிற்புக்குமுன் கொண்டு வர வேண்டும் (. . . பார்க்கிற பெண்).

3. கடைசியில், தழுவியல் கிளவியத்தில் வந்த மீதியான சொற்களைத் தமிழ் பெயரெச்சத் தொடரில் அப்படியே கொண்டு வந்து சேர்க்கலாம் (ἐγω—நான்).

பொதுநிலைத் தழுவியல் கிளவியங்கள் (Indefinite Relative Clauses)

நாம் பொதுநிலைக் கிளவியங்கள் உருவெடுக்கும் முறையை முன்னுலே பார்த்தோம் (பக். 70). ஒரு தழுவியல் கிளவியமும் அதே உருவெடுத்து வரலாம்.

எ–கா : எவன் கடவுளின் கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறானோ, அவன் உண்மையில் அவருடைய பிள்ளை

ὅστις ἀν τας ἐντολας αὐτου τηρῃ, ἀληθως οὐτος ἐστι τεκνον του θεου

இந்த வாக்கியத்தில் எவன் என்பதற்கு ὅστις ἀν என்பதும், ஓகாரம் பொருந்தி நிற்கும் வினைமுற்றிற்குச் (கைக்கொள்ளுகிறான்) சார்புநிலைப் பாங்கிலுள்ள ஒரு வினையும் வந்தன. οὐτος என்பது ὅστις என்பதற்கு முன்னிற்பு. எனினும் இத்தகைய கிளவியங்களில் முன்னிற்பு அடிக்கடி விடப்படும். விடப்படும் இடங்களில், தமிழில் அதனை வருவிக்க வேண்டும்.

எ–கா : எவன் தன் சகோதரனைப் பகைக்கிறானோ (அல்லது, தன் சகோதரனைப் பகைக்கிறவன் எவனோ), அவன் கொலைபாதகன்

ὁς ἀν τον ἀδελφον αὐτου μισῃ, ἀνθρωποκτονος ἐστιν

நீங்கள் எதைக் கேட்டுக்கொள்வீர்களோ, அதை நான் தருவேன்

ὅτι ἀν αἰτησησθε, δωσω

சில சமயம் ἀν என்பதற்குப் பதிலாக ἐαν என்பது அதே பொருளில் வரலாம். ἐαν என்பது தழுவியல் பதிற்பெயருடன் சேர்ந்து நிற்கும் போது, அது எதிர்கால நிபந்தனைக் கிளவியத்தைக் கொண்டுவருவதில்லை (பக். 70 காண்க).

---

பயிற்சி 34, பக். 120 காண்க.

## (உ) நிபந்தனைக் கிளவியங்கள் (Conditional Clauses)

நிபந்தனைப் பொருளைத் தருவதற்குத் தமிழில் செய்யின் எனும் வாய்பாட்டு வினையெச்சம் வழங்கப் பெறும். கிரேக்கத்தில் அப்பொருளைத் தருவதற்கு εἰ எனும் இணைப்பிடைச்சொல் வழங்கப் பெறும். எனினும் கிரேக்கத்தில் வெவ்வேறான வகை நிபந்தனைக் கிளவியங்கள் வெவ்வேறான முறைகளில் கூறப்படும், ஆதலால் அந்த வெவ்வேறான வகைகளை நாம் முதலில் வேறுபடுத்தி அறியல் வேண்டும்.

(i) நிறைவேறிய நிபந்தனைக் கிளவியங்கள் : இத்தகையவற்றில் கூறப்பட்ட பொருள் உண்மையாக அல்லது நிறைவேறியதாகக் கருதப்படுகிறது.

எ—கா : நீங்கள் என்னை அங்கே பார்த்தீர்களானால், ஏன் ஒன்றும் சொல்ல வில்லை? (இங்கே "நீங்கள் என்னைப் பார்த்தீர்கள்" என்பதின் உண்மை ஒப்புக்கொள்ளப்படுகிறது)

(ii) நிறைவேறா நிபந்தனைக் கிளவியங்கள் : இத்தகையவற்றில் கூறப்பட்ட பொருள் நிறைவேறவில்லை (அல்லது நிறைவேறாது) எனக் கருதப்படுகிறது.

எ—கா : அவன் வந்திருப்பின், நான் அவனைப் பார்த்திருப்பேன் (அவன் வரவில்லை என்பது தான் கருத்து)

இந்த இரு வகைகளில் ஒவ்வொன்றையும் இன்னும் மூன்று வகைகளாகப் பிரிக்கலாம் :

1. இறந்த காலத்திற்குரியவை.
2. நிகழ்காலத்திற்குரியவை.
3. எதிர்காலத்திற்குரியவை.

ஆகவே மொத்தத்தில் ஆறு வகைகள் உண்டு. நாம் அந்த ஆறும் கிரேக்கத்தில் எவ்வாறு வருகின்றன என இப்பொழுது ஆராய்வோம்.

(i) நிறைவேறிய நிபந்தனைக் கிளவியங்கள் :

1. இறந்த காலம் :

நிபந்தனைக் கிளவியம் — εἰ + இறந்த காலச் சாற்றுப் பாங்கு
தலைமைக் கிளவியம் — இறந்த காலச் சாற்றுப் பாங்கு

எ—கா : அவன் அதைச் சொன்னானால், அவன் பொய் சொன்னான்
**εἰ τουτο εἰπεν, ἐψευσατο**

2. நிகழ்காலம் :

நிபந்தனைக் கிளவியம் — εἰ + நிகழ்காலச் சாற்றுப் பாங்கு
தலைமைக் கிளவியம் — நிகழ்காலச் சாற்றுப் பாங்கு

எ—கா : கடவுள் அன்பு கூருகிறாரானால், நாமும் அன்பு கூரல் வேண்டும்
**εἰ ὁ θεος ἀγαπᾳ, και ἡμας δει ἀγαπαν**

3. <u>எதிர்காலம்</u>: (இந்த வகை மேலே விளக்கப்பட்டது, பக். 70)

நிபந்தனைக் கிளவியம் — ἐαν + சார்பு நிலைப் பாங்கு
தலைமைக் கிளவியம் — எதிர்காலச் சாற்றுப் பாங்கு

எ—கா : நீ விசுவாசித்தால், கடவுளின் மகிமையைக் காண்பாய்

ἐαν πιστευσῃς, ὀψῃ την δοξαν του θεου

(ii) <u>நிறைவேறா நிபந்தனைக் கிளவியங்கள்</u> :

1. <u>இறந்த காலம்</u> :

நிபந்தனைக் கிளவியம் — εἰ + இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு
தலைமைக் கிலவியம் — இறந்த காலத் தனிப்புச் சாற்றுப் பாங்கு + ἀν

எ—கா : நீங்கள் அவரிடம் நம்பிக்கை வைத்திருப்பின் (ஆனால் வைக்கவில்லை), என்னிடமும் நம்பிக்கை வைத்திருப்பீர்கள்

εἰ ἐπιστευσατε αὐτῳ, ἐπιστευσατε ἀν και ἐμοι

2. <u>நிகழ்காலம்</u> :

நிபந்தனைக் கிளவியம் — εἰ + இறந்த காலத் தொடர்ச்சிச் சாற்றுப் பாங்கு
தலைமைக் கிளவியம் — இறந்த காலத் தொடர்ச்சிச் சாற்றுப் பாங்கு + ἀν

எ—கா : கடவுள் உங்கள் தந்தையாயிருக்கிறார் எனில் (ஆனால் அவர் அல்லர்), நீங்கள் என்னிடம் அன்பு கூருகிறவர்களாயிருப்பீர்கள்

εἰ ὁ θεος πατηρ ὑμων ἠν, ἠγαπατε ἀν ἐμε

3. <u>எதிர்காலம்</u> : இந்த வகை புதிய ஏற்பாட்டில் வர வில்லை. எனினும் பின்வரும் வாக்கியம் அது தமிழில் எவ்வாறு கூறப்படும் என எடுத்துக் காட்டுகிறது :

நீங்கள் கடவுளை நேரில் காண நேரிடில் (ஆனால் அப்படி நேரிட முடியாது), நீங்கள் சாவீர்கள்.

குறிப்புகள் :

1. எதிர்காலத்திற்குரிய நிபந்தனைக் கிளவியங்களைத் தவிர, வேறெல்லா வகையான நிபந்தனைக் கிளவியங்களிலும் சாற்றுப் பாங்கே வழங்கப் பெறும்.

2. தலைமைக் கிளவியத்தில் வந்த ἀν எனும் இடைச்சொல் நிறை வேரு நிபந்தனைக் கிளவியங்களுக்கு அடையாளமாம்.

---

பயிற்சி 35, பக். 120 காண்க.

## (ஊ) காலம்

சில முன்னிடைச்சொற்கள் காலப் பொருளில் வழங்கப் பெறும் (பக். 15–19 காண்க) :

1. *μετα* + செயப்படுபொருள் வேற்றுமை.

எ–கா : *μετα μιαν ἡμεραν* = ஒரு நாளுக்குப்பின்

2. *προ* + உடைமைப் பொருள் வேற்றுமை.

எ–கா : *προ των ἡμερων ἐκεινων* = அந்த நாட்களுக்குமுன்

3. *ἐν* + கொடைப் பொருள் வேற்றுமை.

எ–கா : *ἐν τῃ ἀρχῃ* = ஆதியில்

மேலும், காலப் பொருள் வெறும் வேற்றுமை உருபுகளினுல் முன்னிடைச்சொல்லின்றி உணர்த்தப் படலாம் :

1. செயப்படுபொருள் வேற்றுமை—எவ்வளவு காலம் என உணர்த்தும்.

எ–கா : *τρεις ἡμερας ἐμειναν παρ᾿ αὐτῳ*
மூன்று நாட்கள் அவருடன் தங்கினர்கள்

2. உடைமைப் பொருள் வேற்றுமை—எத்தகைய நேரத்தில் ஒரு காரியம் நடந்தது என உணர்த்தும்.

எ–கா : *ἠλθεν προς αὐτον νυκτος*
இரவில் அவரிடம் வந்தான்

3. கொடைப் பொருள் வேற்றுமை—திட்டமாய் எந்த நேரத்தில் ஒரு காரியம் நடந்தது என உணர்த்தும்.

எ–கா : *τῃ τριτῃ ἡμερᾳ ἠγειρεν*
மூன்றும் நாளில் உயிர்த்தெழுந்தார்

# இணைப்பு (அ)

## பயிற்சிப் பகுதி

பயிற்சி 1. [அதி. II (அ) காண்க]

புதுச் சொற்கள் :

| | | | |
|---|---|---|---|
| ἀδελφος | = சகோதரன் | κοσμος | = உலகம் |
| ἀνθρωπος | = மனிதன், ஆள் | λογος | = வார்த்தை, சொல், செய்தி |
| διαβολος | = பிசாசு | οὐρανος | = வானம், பரலோகம் |
| θανατος | = மரணம் | υἱος | = மகன், குமாரன் |
| θεος | = கடவுள், தேவன் | Χριστος | = கிறிஸ்து |

பெண்பால் :

| | | | |
|---|---|---|---|
| ὁδος | = வழி | παρθενος | = கன்னிகை |

தமிழில் மொழிபெயருங்கள் :

| | | |
|---|---|---|
| 1. λογοι | 5. ὁδῳ | 9. ὠ Χριστε |
| 2. οὐρανου | 6. ἀνθρωπων | 10. διαβολῳ |
| 3. ἀδελφοις | 7. θεου | 11. υἱους |
| 4. κοσμον | 8. θανατον | 12. παρθενοι |

கிரேக்கத்தில் மொழிபெயருங்கள் :

| | | |
|---|---|---|
| 13. உலகத்திற்கு | 17. வானங்களை | 21. மனிதர்களே |
| 14. கன்னிகையின் | 18. சகோதரர்களின் | 22. தேவர்கள் |
| 15. மரணத்தின் | 19. பிசாசை | 23. வழிகளை |
| 16. வார்த்தைகளுக்கு | 20. கிறிஸ்துவை | 24. மகனே |

பயிற்சி 2. [அதி. II (ஆ) காண்க]

புதுச் சொற்கள் :

| | |
|---|---|
| εἰδωλον | = விக்கிரகம் |
| ἐργον | = வேலை, கிரியை, செயல் |
| παιδιον | = சிறு பிள்ளை |
| τεκνιον | = சிறு பிள்ளை |
| τεκνον | = பிள்ளை |

தமிழில் மொழிபெயருங்கள் :

| | |
|---|---|
| 1. ἐργοις | 4. εἰδωλα |
| 2. παιδιῳ | 5. τεκνιων |
| 3. τεκνου | 6. ἐργον |

கிரேக்கத்தில் மொழிபெயருங்கள் :

| | |
|---|---|
| 7. சிறு பிள்ளைகளே | 10. சிறு பிள்ளையின் |
| 8. விக்கிரகத்தை | 11. செயல்களை |
| 9. பிள்ளைகளுக்கு | 12. வேலைக்கு |

பயிற்சி 3. [அதி. II (இ), (ஈ) காண்க]

புதுச் சொற்கள் :

| | | | |
|---|---|---|---|
| ἀγαπη | = அன்பு | ἀδικια | = அநீதி |
| ἀρχη | = ஆதி, தொடக்கம் | ἀληθεια | = உண்மை, சத்தியம் |
| δικαιοσυνη | = நீதி, நேர்மை | ἁμαρτια | = பாவம் |
| ἐντολη | = கட்டளை | βασιλεια | = இராச்சியம், அரசு |
| ζωη | = ஜீவன் | ἡμερα | = நாள் |
| ψυχη | = உயிர், ஆன்மா | καρδια | = உள்ளம் |
| | | κοινωνια | = ஐக்கியம் |
| γλωσσα | = நாவு | οἰκια | = வீடு |
| δοξα | = மகிமை | σκοτια | = இருள் |
| θαλασσα | = கடல் | ὡρα | = வேளை |

ஆண்பால் :

| | | | |
|---|---|---|---|
| μαθητης | = சீஷன் | προφητης | = தீர்க்கதரிசி |

தமிழில் மொழிபெயருங்கள் :

| | | |
|---|---|---|
| 1. δοξαν | 8. ἁμαρτιων | 15. θαλασσῃ |
| 2. βασιλειαν | 9. καρδιων | 16. δικαιοσυνῃ |
| 3. σκοτιᾳ | 10. ψυχας | 17. ἀληθειαν |
| 4. ὠ προφητα | 11. μαθητου | 18. κοινωνιας |
| 5. ἡμερας | 12. ζωην | 19. οἰκιαις |
| 6. ἐντολαις | 13. γλωσσης | 20. ἀδικιαι |
| 7. ἀρχης | 14. ὡραι | |

கிரேக்கத்தில் மொழிபெயருங்கள் :

| | | |
|---|---|---|
| 21. ஆன்மாக்களுக்கு | 24. அநீதியை | 27. பாவங்கள் |
| 22. அன்புக்கு | 25. நேர்மையின் | 28. கட்டளைகளை |
| 23. ஜீவனின் | 26. உள்ளங்களை | 29. தொடக்கத்தை |

